








Help Rohan find his Fun Centre™.

Chocolate Lemon Pineapple Elaichi

# Fun Centre™

**Cream Biscuits**

*The Fun is in the Centre*

MRP Rs. 8.00 inclusive of all taxes for net wt. 100 g

visit us at www.parleproducts.com

NOW AVAILABLE AT ALL LEADING STORES

# TRAPPED

## GAMES AND ACTIVITY CD-ROM






PROF. PURENOTHIN, THE RENOWNED INDOLOGIST, IS TRAPPED INSIDE THE MOUND OF MURUKKI. YOU JOIN DETECTIVE MANDOO TO SEARCH FOR THE PROFESSOR AND SAVE HIM. THE ONLY WAY TO THE MOUND OF MURUKKI IS REVEALED TO YOU. ONLY WHEN YOU CAN GET HOLD OF FOUR KEYS HIDDEN ALONG YOUR ROUTE. AND YOU HAVE TO SEARCH FOR THEM THROUGH A DOZEN DIFFERENT GAMES AND ACTIVITIES. GO FOR CLUES AND KEYS!

MIND YOU, YOU HAVE ONLY 60 MINUTES TO REACH THE PROFESSOR! GET THERE FAST, BUT BEWARE OF YOURSELF BEING TRAPPED!



Hey, but this one is a whole lot of fun!
You have a different set of games and activities, every time you begin your search.

A quality product from **Chandamama**

For more details, please contact :
**Chandamama India Limited,**
82, Defence Officers' Colony,
Ekkatuthangal, Chennai - 600 097.
www.chandamama.org

RS. 199/- ONLY

# அம்புலிமாமா

சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 பிப்ரவரி : 2004 புன்னகை : 12





**SUBSCRIPTION**

For USA and Canada
Single copy $2
Annual subscription $20
*Remittances in favour of Chandamama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.120/- புக்போஸ்டில் உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# பூமண்டலத்தைக் காக்க!

புத்தாண்டுக் கொண்டாட்டங்கள் முடிவதற்குள் மலேசியாவின் பலத்த நில நடுக்கம் நம்மை அதிர வைத்து விட்டது. உயிரிழப்புகள் பற்றிய செய்திகள் இன்னமும் வந்து கொண்டே இருக்கின்றன. ஒரு வாரத்திற்கு முன் தான் ஈரானில் பாம் நகரில் பயங்கர நிலநடுக்கம் ஏற்பட்டு 50,000 பேர்களுக்கு மேல் உயிரிழந்தனர்!

நம் பூமண்டலத்தில் நிறைய வீடுகள் வந்து நகரங்கள் தோன்றுவதால் இயற்கையின் சமநிலை குலைந்து விடுகிறது. இதனால் பூமண்டல அமைப்பினுள் பல மாறுதல்கள் ஏற்பட்டு அசைவுகள் உண்டாகின்றன. இவற்றால் நிலநடுக்கம், எரிமலை வெடிப்பு போன்றவை ஏற்படுகின்றன.

மனிதன் நீருக்காகவும், எரி எண்ணெய்க்காகவும் பூமியைத் தோண்டுகிறான். பூமிக்கு உள்ளும் வெளியேயும் வெடிகளை வைத்து அதைத் தகர்க்கிறான். இதனால் சுற்றுப்புறச் சூழல் மாசுபடுகிறது. ஆறுகள் ஓடுவதில் தடைகள் ஏற்படுகின்றன. ஏனெனில் அவற்றில் கழிவுப் பொருள்கள் சேர்க்கப் படுகின்றன. இம்மாதிரி நாம் செய்வதால் பழிவாங்குவது போல இயற்கை சீற்றம் கொண்டு செயல்படுகிறது.

மனிதன் தான் வசதியாகவும் ஆடம்பரமாகவும் வாழ முயல்வதால் இந்த கோர சம்பவங்கள் நிகழ்கின்றன என்பதைக் கண்டு கொள்ளலாம். எனவே பூமண்டலத்தின் இயற்கைச் சமநிலையைப் பாதுகாத்து அதனைக் கெடுக்காமல் இருந்து வருவோம்.

*ஆசிரியர் :* **விஸ்வம்**

Visit us at : http://www .chandamama.org

GET YOUR COPY AT YOUR DOORSTEP FOR ONE YEAR FOR JUST RS. 120/-

**A TREASURE-TROVE FOR TALENTED TOTS**



# Junior
CHANDAMAMA




## THE ONE-STOP COMPLETE FUN AND ACTIVITY MAGAZINE.



- Games, puzzles, riddles, stories, colouring activity and more...

- Good habits grow when young. Check out articles and features in which values are taught subtly and let your child learn about Indian culture and heritage.



**PAGE AFTER PAGE WILL KINDLE YOUR CHILD'S IMAGINATION**

*Mail the form below along with the remittance to :* Subscription division,
Chandamama India Limited, 82 Defence Officers' Colony, Ekkatuthangal, Chennai - 600 097.

---

## SUBSCRIPTION FORM

Please enrol me as a subscriber of Junior Chandamama.

I give below the required particulars:

Name : ............................................................ Address : ..............................................

...................................................................................................................................

..............................................................................PIN Code : ..............................................

I am remitting the amount of Rs.120/- for 12 issues by Money Order/Demand Draft/ Cheque No..................... on........................................ Bank .............................................. branch drawn in favour of Chandamama India Ltd., encashable at Chennai (outstation cheque to include Rs.25/- towards Bank Commission).

Place : ....................

Date : ...................

Signature

## மொட்டு மலர்ந்ததும்...



# புத்தகம் அளித்த புத்துணர்ச்சி!

புத்தகம் அறிவை வளர்த்து விஞ்ஞான விநோதங்களை விவரிக்கிறது. சிறுவனாக இருந்தபோது படித்த புத்தகங்கள் அவனது வாழ்க்கையில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி விடுகின்றன. இது போல ஒரு பெரிய மனிதரின் வாழ்க்கை வரலாற்றைப் படித்த ஒரு சிறுவன் அதனால் புத்துணர்ச்சி பெற்று பெரியவனானதும் பல அரிய செயல்களைச் செய்து தலைவனாகி உலகப் புகழ் பெற்று விட்டான். அவனது இளமையில் நடந்த ஒரு நிகழ்ச்சியைப் பார்ப்போம்.

அச்சிறுவனுக்குப் புத்தகங்களைப் படிக்க மிகவும் ஆர்வம் உண்டு. மனிதனை அடிமைப் படுத்துவது பாவம் இல்லை என்றால் அதை விடக் கொடிய பாவம் வேறு என்ன இருக்கிறது? என்ற வாக்கியத்துடன் தொடங்கும் ஜார்ஜ் வாஷிங்டனின் வாழ்க்கை வரலாற்றை முதல் முதலில் படித்த அவன் மெய் சிலிர்த்துப் போனான். அதைத் திரும்பத் திரும்பப் படித்து அதனை தன் குறிக்கோளாகக் கொண்டான்.

ஒரு நாள் அவன் பள்ளியிலிருந்து வீட்டிற்கு வந்ததும் அவன் கண்ட காட்சி அவனைத் திகைக்க வைத்தது. ஏனெனில் தான் உயிருக்கு உயிராக நேசித்த அப்புத்தகத்தை அவனது தந்தை தலையணையாக வைத்துக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்தார். அவன் மெதுவாக அவரருகே போய் அவரது தூக்கதைக் கெடுக்காமல் அவரது தலையின் கீழ் இருந்த அப்புத்தகத்தை எடுத்து விட்டுத் தன் தொடை மீது அவரது தலையை வைத்துக் கொண்டான். சற்று நேரத்திற்குப் பின் கண் விழித்த அவனது தந்தை தன் தலை தன் மகனின் தொடை மீது இருப்பது கண்டு ஆச்சரியப் பட்டார். அது பற்றி அவர் கேட்டுத் தெரிந்து கொண்ட அவர் ''மகனே! நம் நாட்டில் 'அடிமை' என்ற பேயை அடியோடு விரட்டப் போகிறாய்'' என்று கூறினார்.

அந்தத் தந்தை கூறியது பலித்தே விட்டது? அச்சிறுவன் பெரியவனாகி அமெரிக்காவின் ஜனாதிபதியாகி அடிமைத்தனம் என்பதை ஒழித்த அப்ரஹாம் லிங்கன் தான்!



# பொறுப்பை ஏற்றுக்கொள்

அகிலாண்டம் பணக்காரி. அந்த கர்வத்தில் தன் நாத்தனார் நாகம்மாவையும் அவளது மகள் நளினியையும் அலட்சியப்படுத்தி எப்போதாவது தான் போய்ப் பார்ப்பாள். ஒருநாள் நாகம்மா இறந்து விட்டாள் என்ற தகவல் வரவே, அகிலாண்டம் அந்த ஊருக்குப் போய்த் தன் நாத்தனாருக்கு ஈமச் சடங்குகளைச் செய்து விட்டு நளினியைத் தன்னோடு தன் ஊருக்குக் கூட்டிக் கொண்டு வந்தாள். நளினி வந்து விட்டதால் அகிலாண்டம் அதுவரை வீட்டு வேலைகளைச் செய்ய அமர்த்தியிருந்த முனியம்மாவை நிறுத்திவிட்டு, நளினிதான் வீட்டு வேலைகளைச் செய்ய வேண்டும் என்று கூறி விட்டாள்.

அகிலாண்டத்தின் மகன் சேகர் வயதிற்கு வந்த வாலிபன். வீட்டு நிர்வாகத்தையும் விவசாயத்தையும் அவனால் கவனித்துக் கொள்ள முடியும். ஆனால் அகிலாண்டம் தன் அண்ணன் அருணாசலத்தை வரவழைத்து எல்லா நிர்வாகத்தையும் அவள் அவனிடம் ஒப்படைத்தாள். அருணாசலத்துடன் அவனது இரு மகள்களும் வந்தார்கள். மூத்தவளான மாதவி சமையல் வேலைகளைப் பார்த்துக் கொண்டாள். இதனால் அந்த வீட்டில் அருணாசலமும் மாதவியும் என்ன சொல்கிறார்களோ அது தான் நடந்தது. சேகரை அவர்கள் லட்சியம் செய்யவில்லை.

நளினி அந்த வீட்டிற்கு வந்ததும் இதை கவனித்தாள். சேகர் இவ்வாறு அலட்சியப்படுத்தப் படுவது அவள் மனதை உறுத்தியது. சேகருக்கு மாதவியைத்தான் திருமணம் செய்து வைக்கப் போகிறார்கள் என்று ஊரார் பேசிக் கொண்டார்கள். இதனால் மாதவி அப்போதே அந்த வீட்டு மருமகளாக ஆகி விட்டதாக எண்ணித் தலைகால் தெரியாமல்

-சிவனார் செல்வன்-

துள்ளலானாள். அருணாசலமோ அந்த வீட்டின் எஜமானனாகி விட்ட தாகவே எண்ணி விட்டான். அதனால் சேகர் எதைச் சொன்னாலும் அவன் மட்டம் தட்டிக் கொண்டே இருந்தான்.

ஒருநாள் சேகர் அருணாசலத்திடம் ''மாமா! இந்தத் தடவை வயலில் நெல் பயிரிட வேண்டாம். மஞ்சள் பயிராக்குங்கள். அதற்கு நல்ல கிராக்கி இருப்பதால் நல்ல வருமானம் உள்ளது. நிறையப் பணமும் கிடைக்கும்'' என்றான். அருணாசலமோ ''எல்லாம் தெரிந்தது போல உளறாதே. மஞ்சள் போட்டால் இலாபம் இல்லை'' என்றான் முகத்தைச் சுளித்தவாறே. சேகரோ ''இல்லை மாமா! வெளிச் சந்தையில் நெல் விலை மிகவும் இறங்கி விட்டது. அதனால்'' என்று சொல்லும்போதே அருணாசலம் ''எல்லாம் எனக்குத் தெரியும். நீ எதுவும் சொல்லவேண்டாம். இந்த வருடம் நெல் தான் பயிரிடப் போகிறேன்'' என்றான். சேகர் ஏதோ சொல்ல முயலவே, அவனது தாயார் குறுக்கிட்டு ''சேகர், நீ பேசாமல் இரு. உன் மாமா எவ்வளவு பெரியவர்! எவ்வளவு அனுபவஸ்தர்! அவரை விட உனக்கு அதிகம் தெரிந்து விட்ட தோ?'' என்று சொல்லி அவனை அடக்கினாள். சேகர் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டான். அதைக் கண்டு மாதவி சிரித்தாள். நளினியோ அவன்மீது இரக்கமே கொண்டாள்.



கொஞ்ச நாட்களுக்குப் பின் நவராத்திரி விழா வந்தது. ஒவ்வொரு நாளும் ஒரு வீட்டார் புராணக் கதை கூற யாராவது ஒரு பண்டிதரை அழைத்து வருவார்கள். அகிலாண்டமும் வருடாவருடம் கதாகாலட்சேபம் செய்வதற்கு ஏற்பாடு செய்வது வழக்கம். அந்த ஆண்டில் ஏற்பாடு செய்யப்பேச்சு வந்தபோது அருணாசலம் ''இந்த முறை நமக்கு வழக்கமாக வரும் ராமநாதபாகவதர் உடல் நலம் குன்றி இருப்பதால் அவரால் கதாகாலட்சேபம் செய்ய முடியாது. வேறு யாராவது பண்டிதரைப் பார்க்க வேண்டும்'' என்றான்.

அதைக் கேட்ட சேகர் ''இந்த முறை நாம் ஒரு நாடகத்திற்கு ஏற்பாடு செய்வோம். எனக்குத் தெரிந்த நடராஜா நாட்டியக் குழுவைக் கொண்டு மகிஷாசுரவதம்



என்ற நாடகத்தை நடத்தலாம். இது புதுமையாகவும் இருக்கும்'' என்றான். உடனே அருணாசலம் ''நாடகமா? அதெல்லாம் கூடாது. வழக்கமாக ஏற்பாடு செய்யப்படும் புராணப் பிரசங்கமே நடக்க வேண்டும். சேகர்! உனக்கு மூளைக் கோளாறா என்ன? இந்த மாதிரிப்பைத்தியகாரத் தனமான யோசனை எல்லாம் சொல்லாதே'' என்று கடிந்து கொண்டான். சேகரின் தாயாரும் அவனிடம் ''உன் மாமா சொல்வது தான் சரி. அவர் சொல்கிறபடியே நடக்கட்டும்'' என்றாள்.

நவராத்திரி ஆரம்பமாகுமுன் அவ்வூர் பிரமுகர்களைக் காண நடராஜ நாடகக் குழுவின் அமைப்பாளர் ராமைய்யா வந்தார். அவர்களிடம் ''ஐயா! இந்த நவராத்திரியில் ஒரு நாள் நாங்கள் இலவசமாக மகிஷாசுரவதம் என்ற நாடகத்தை இங்கு நடத்த எண்ணுகிறோம். அதற்கு நீங்கள் அனுமதிக்க வேண்டும்'' என்று வேண்டினார். பிரமுகர்களும் அதற்கு அனுமதித்து ஒரு நாளையும் ஒதுக்கினார்கள். குறிப்பிட்ட நாளில் நாடகம் நடந்தது. ஊரார் எல்லோரும் அந்த நாடகத்தை ஆரம்பம் முதல் கடைசி வரை இருந்து பார்த்து ரசித்தார்கள்.

நாடக முடிவில் நாடகக் குழுவின் அமைப்பாளர் மேடையில் தோன்றி ''ஊர் மக்களே. இப்போது ஒரு உண்மையை உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். இந்த நாடகத்தை இலவசமாக நான் நடத்திக் கொடுப்பதாக இவ்வூர் பிரமுகர்களிடம் கூறியது உண்மை அல்ல. இந்த ஊரிலுள்ள ஒரு இளைஞர் வந்து என்னைக் கண்டு இந்நாடகத்தை நடத்தப் பணம் கொடுத்ததோடு தன் பெயரை யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். இந்த நற்செயல் புரிந்தவர் யார் என்பது உங்களுக்குத் தெரிந்தே இருக்க வேண்டும் என்பதால் இப்போது கூறுகிறேன். அந்த இளைஞரின் பெயர் சேகர்'' என்றார்.

அதைக் கேட்ட யாவரும் ''பேஷ். சேகர் நல்ல வேலையே செய்திருக்கிறான். திரும்பத் திரும்ப பிரசங்கங்களையே கேட்டு அலுத்துப் போன எங்களுக்கு புதிதாக இந்த நாடகம் பார்க்கக் கிடைத்தது எங்களுக்கு மகிழ்ச்சியையே அளிக்கிறது. இனி

வருடாவருடம் இம்மாதிரி நாடகங்களுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்று கூறி சேகரை மிகவும் பாராட்டினார்கள். சேகரோ திகைத்துப் போனான். ஏனென்றால் அவன் நடராஜ நாடகக் குழுவின் அமைப்பாளரைப் பார்க்கவும் இல்லை. பேசவும் இல்லை. பணமும் கொடுக்கவில்லை. ஆனால் நாடகக் குழுவின் அமைப்பாளர் ஏன் அவ்வாறு அறிவித்தார் என்று எண்ணலானான். அப்போது எதுவும் பேசாமல் எல்லோருடைய பாராட்டுதல்களையும் ஏற்றுக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

அவனைக் கண்ட நளினி ''என்ன உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதா? இதை நான்தான் செய்தேன். அதற்காக என்னை மன்னியுங்கள். எங்கள் ஊர் கிராம அதிகாரி என் நெருங்கிய உறவினரே. என் தாயார் இறக்குமுன் கொஞ்சம் பணத்தை அவரிடம் கொடுத்து வைத்திருந்தாள். அதைக் கொண்டு இந்த நாடகத்தை இவ்வூரில் நடத்த ஏற்பாடு செய்யும்படி நான் அவரிடம் வேண்டினேன். அவரோ தானே நாடகத்திற்கான செலவு முழுவதையும் ஏற்பதாயும், நாடகத்தை இவ்வூரில் நடக்க வைத்தது சேகர் தான் என்று அறிவிக்கவும் நாடக அமைப்பாளரிடம் கூறினார். நீங்கள் இந்த மாதிரி நாடகம் நடத்த விரும்பியபோது உங்கள் தாய் மாமா அதை நடக்க விடாமல் தடுக்கப் பார்த்தார். நீங்கள் உங்கள் வயலில் நெல்லோடு மஞ்சளும் போட வேண்டும் என்று போதும் அதையும் உங்கள் தாய் மாமா எதிர்த்தார். இப்படியாக ஒவ்வொரு விஷயத்திலும் அவர்



தலையிட்டு உங்களைச் சுதந்திரமாகச் செயல் பட விடாமல் செய்து வருகிறார். இது எனக்குச் சற்றும் பிடிக்கவில்லை. இது உங்கள் வீடு. நீங்கள் வயதிற்கு வந்தவர். நல்லது, கெட்டது எது என்று அறிந்து கொள்ளும் சக்தி உங்களுக்கு உண்டு. இந்த நிலையில் நீங்களே வீட்டு நிர்வாகத்தையும் விவசாயத்தையும் ஏன் கவனிக்கக் கூடாது? உங்கள் பொறுப்பு என்ன என்பதை நீங்கள் உணர்ந்து அதன்படி நடக்க வேண்டாமா?'' என்று கூறினாள்.

சேகர் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தான். ஆம், அவள் சொல்வது சரியே. அவன் தான் அந்த வீட்டு நிர்வாகத்தை ஏற்று நடத்தி வந்திருக்க வேண்டும். ஆனால் தன் மாமா தன் வீட்டில் வந்து உட்கார்ந்து கொண்டு தானே வீட்டின் எஜமானன் என்று எண்ணிக் கொண்டு எல்லா விஷயங்களிலும் அவரே முடிவு எடுக்கிறார். அவரது மகள் மாதவியும் தானே அவ்வீட்டு மருமகளாகி விட்டது போல எண்ணி விட்டாள். மாதவி மாமா வழியாகத் தனக்கு முறைப் பெண் என்றால் அத்தை வழி முறைப் பெண் நளினி. அவளுக்கு அந்த வீட்டில் எதைச் சொல்லவும் செய்யவும் உரிமை மறுக்கப் படுகிறதே. இந்த நிலையைத் தொடர விடக் கூடாது என்று சேகர் தீர் மானித்துக் கொண்டான்.

சேகரும் ''ஆமாம். நீ சொல்வது சரியே. நாளை முதல் நானே வீட்டு நிர்வாகத்தையும் விவசாயத்தையும் வரவு செலவு கணக்கையும் கவனிக்கப் போகிறேன். இதற்கு உதவியாக எனக்கு நீயும் இருக்கப்போகிறாய். இப்படி நான் முடிவு எடுத்ததோடு இன்னொரு விஷயத்திலும் நான் முடிவு எடுத்து விட்டேன்'' என்றான் அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே. நளினியும் ''இன்னொரு விஷயமா? அது என்ன?'' என்று ஆவலுடன் கேட்டாள். சேகரும் ''அதுவா? வாழ்நாள் முழுவதும் எனக்கு நீ யோசனைகள் சொல்லிக் கொண்டிருக்க உன்னை நான் மணந்து கொள்வது தான்'' என்றான்.

நளினி அது கேட்டு நாணித் தலை குனிந்தாள்.





# மாய மந்திரவாதி

## 3

(காட்டுப் பகுதியில் இருந்து கொண்டு கிராம மக்களைத் துன்புறுத்தி வந்த கொள்ளைக்காரர்களை காளிவர்மன் அடித்து விரட்டினான். அவர்கள் அண்டை நாட்டிற்கு ஓடவே அந்நாட்டு மன்னன் தன் நாட்டின் மீது படை எடுத்து வருவானோ என்று ஜிதகேது பயந்தான். அதனால் காளிவர்மனைத் தூக்கில் போடக் கட்டளை இட, வீரர்கள் அவனைக் கொலைக் களத்திற்குக் கொண்டு சென்றார்கள். அப்போது-)

திடீரென 'கரடியப்பர் வாழ்க' என்ற குரல் ஒலித்தது கேட்டு குதிரைப் படை வீரர்கள் சுற்றிலும் பார்த்தார்கள். காளிவர்மன் கீழே குதித்து வாளை உறைக்குள் சொருகிக் கொண்டான். அப்போது சற்று தூரத்தில் நீர் வீழ்ச்சியருகே உடல் கட்டுடன் கூடிய ஒரு மனிதன் வந்து நின்றான்.

காளிவர்மன் வீரர்களிடம் அகப் படாமல் தப்பிச் செல்ல ஏதாவது வழி இருக்கிறதா என்று பார்க்கலானான். அந்த வீரர்களோ அவனைப் பாராமல் வேறு எங்கெங்கோ பார்த்துக் கொண் டிருந்தார்கள். நீர் வீழ்ச்சியின் பக்கம் நின்ற அந்த திட காத்திரமனிதனைப் பார்த்து ஆச்சரியமும் பயமும் அடைந்தார்கள்.

அப்போது அந்த மனிதன் அங்கிருந்து மெதுவாக நடந்து வரலானான். அவனது கையில் பருமனான தடி இருந்தது. அதன்



பிடியில் வைரம் பதிக்கப் பட்ட கரடித்தலையின் உருவம் இருந்தது. அந்த மனிதன் வந்து கொண்டிருந் ததைப் பார்த்த காளிவர்மன் அங்கிருந்து ஓடாமல் அவனையே பார்த்துக் கொண்டு கற்சிலை போல இருந்தான். அங்கிருந்த குதிரைப் படை வீரர்களும் அதே நிலையில் தான் இருந்தனர்.

அவன் அருகில் வந்தபோது கரடித் தோல் போர்த்திக் கொண்டிருப்பதை எல்லோரும் பார்த்தார்கள். அவனும் ''தக்க சமயத்தில் நான் கரடியப்பர் வாழ்க என்று குரல் கொடுத்ததால் தான் இங்கு அநாவசியமாக ரத்தம் சிந்துவது தடுக்கப்பட்டது. நான் மாயமந்திரவாதி'' என்றான். ஒரு நிமிட நேரத்திற்கு யாரும் எதுவும் பேசவில்லை. காளிவர்மன் வாளை உருவி ''நாங்கள் கேட்காமலேயே நீங்கள் யார் என்பதைக் கூறி விட்டீர்கள். மிகவும் சரி. நீங்கள் ஏதோ ரத்தம் சிந்தாமல் தடுத்ததாகக் கூறினீர்கள். ஆனால் இப்போது என்னை நீங்கள் போக விடாமல் தடுத்தால் ரத்தம் சிந்தவே சிந்தும்'' என்று தன் வாளை ஆட்டியவாறே கூறினான்.

அதைக் கேட்ட மாய மந்திரவாதி ''ஓ! நீ துணிச்சல்காரனாக இருக் கிறாயே. சற்று நில்'' என்று கூறித் தன் தடியால் எருமைக் கடாவின் மீது உட்கார்ந்த தலையாரியைத் தட்டி ''அடே! முகத்திரை அணிந்த கருப்பு அங்கியை அணிந்துள்ள நீ பேயா, பிசாசா அல்லது தலையாரியா?'' என்று கேட்டான். அவனும் ''நான் பேயோ அல்லது பிசாசோ அல்ல. அரசாங்கத் தலையாரி. குற்றவாளி யின் தலையை வெட்ட மன்னர் கட்டளை இட்டால் அதை நிறை வேற்றுபவன் நான்'' என்றான்.

அப்போது மாய மந்திரவாதி ''ஒருவனுக்கு மரண தண்டனை விதிக்கப்படவே, அவன் வீரர்களிட மிருந்து தப்பி ஒரு அரசாங்க அதிகாரியின் தலையை வெட்டி விட்டான் என்றால் அவனை நீ என்ன செய்வாய்?'' என்று கேட்டான். தலையாரியும் ''இப்போதைய நிலையில் என்னால் எதுவும் செய்ய முடியாது. ஏனென்றால் இந்தக் காளிவர்மன் என் கோடாலியைப் பிடுங்கி வைத்துக் கொண்டிருக் கிறான்'' என்றான். அப்போது காளிவர்மன் தான் தலையாரியிட மிருந்து பிடுங்கிய கோடாலியை

அவன் முன் விட்டெறிந்து ''எடுத்துக் கொள் உன் கோடாலியை. ஆனால் என்னைப் போக விடாமல் தடுக் காதே'' என்றான்.

தலையாரி தன் கருப்பு அங்கியை யும் முகத்திரையையும் கழற்றி எறிந்து விட்டுத் தன் கோடாலியை எடுத்துக் கொண்டு ''காளிவர்மா! நீ மகா சூரன் தான். நான் உன்னை ஒன்றும் செய்யமாட்டேன்'' என்றான். காளிவர்மனும் ''சரி, நான் கிளம்புகிறேன். இந்தக் குதிரைப் படை வீரர்கள் என்னைத் தடுத்து நிறுத்தினால் அவர்களுக்கும் அவர் களது தலைவனுக்கு நேர்ந்த கதிதான் ஏற்படும்'' என்றான். அவ்வீரர்களில் ஒருவன்'' நாங்கள் உன்னை எதுவும் செய்ய மாட்டோம். தலை நகருக்குப் போய் மன்னனிடம் இங்கு நடந்த தைக் கூறுவோம். இப்போது எங்களுக்குக் கட்டளை இட யாரும் இல்லையே'' என்றான்.

காளிவர்மனும் ''நீ சொல்வது சரியே! நீங்கள் தலை நகருக்குப் போங்கள். நான் என் வழியே போகி றேன்'' என்று கூறிக் குதிரை மீது ஏறி உட்கார்ந்தான். அப்போது மாய மந்திரவாதி ''நான் ஒருவன் இருப் பதை மறந்து விட்டாயா?'' எனக் கூறியவாறே அவனது குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண் டான். காளிவர்மனோ ''எனக்கு மந்திரவாதிகள் என்றாலே கொஞ்ச மும் பிடிக்காது. அதனால் என்னைத் தடுக்காதே'' என்றான். மாய மந்திர வாதியோ ''உன்னை என் குரு பெரிய



கரடியப்பர் பார்த்தே ஆக வேண்டும். நாங்கள் தேடி கொண்டிருப்பது உன் போன்ற ஒருவனைத்தான். அதனால் நீ என்னோடு வா'' என்றான். காளிவர்மனோ ''வீட்டை விட்டுக் கிளம்பிய பின் நான் பட்ட அவஸ்தைகள் எல்லாம் போதும். இனி என் ஊருக்கே போய் விவசாயம் செய்து கொண்டு நிம்மதியாக இருக்கப் போகிறேன்'' என்றான். அப்போது மாயமந்திரவாதி ''காளிவர்மா! நீ போக முடியாது. அங்கே யார் வருகிறார்கள் என்று பார்த்தாயா?'' என்று கேட்டான். அதைக் கேட்டு காளிவர்மன் பார்த்தான். ஆம். மூன்று குதிரை வீரர்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் இடையில் இருந்தவன் பட்டாடைகள் அணிந்து தலையில் சரிகைத் தலைப் பாகையுடன் வந்து கொண்டிருந்தான். மற்ற இருவரும்



இரும்புக் கவசங்கள் அணிந்தவர் களாய் கேடயங்களைப் பிடித்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களில் நடுவில் வந்தவன் தலையாரியைப் பார்த்து ''இந்தக் காளிவர்மனுக்கு மன்னர் மரண தண்டனை விதித்தாரே. இன்னும் அதை நீ ஏன் நிறைவேற்றவில்லை?'' என்று அதட்டிக் கேட்டான். தலையாரியோ என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் திரு திருவென்று விழித்துக் கொண்டிருந் தான். அப்போது மாயமந்திரவாதி ''ஓ! நீயா? ஜிதகேது மன்னனின் முதலமைச்சன் ஜீவகுப்தனா?'' என்று அலட்சியமாகக் கேட்டான்.

ஜீவகுப்தன் அப்படி அவன் கேட்டது தன்னை அவமானப் படுத்துவது என்று எண்ணினான். அதனால் அவன் ''யார் இந்தப் பரதேசிப்பயல்? இவனை அடித்து உதைத்து விரட்டுங்கள்'' என்று கூவினான். அமைச்சனோடு வந்த ஒரு வீரன் வாளை உருவவே. மாய மந்திரவாதி தன் கையிலிருந்த தடியை உயரத்தூக்கி ஆட்டினான். அதைக் கண்ட குதிரைகள் மிரண்டு துள்ளின.

ஜீவகுப்தனும் ''வீரர்களே! ஏன் குதிரைகள் மிரண்டன?'' என்று கேட்டான். அவனருகே இருந்த வீரன்'' அந்த மனிதன் கையில் வைத்துள்ள தடியின் நுனியில் கரடித் தலையின் உருவம் உள்ளது. அந்த உருவத்தின் வாயிலிருந்து நெருப்புப் பொறிகள் வந்து கொண்டிருக் கின்றன'' என்றான். ஜீவகுப்தனும் மந்திரவாதி பிடித்திருந்த தடியைக் கூர்ந்து பார்த்தான். பிறகு அவன் மாய மந்திர வாதியைப் பார்த்து ''ஓகோ! நீ மந்திர மாய ஜாலவித்தைகள் செய்து காட்டிப் பிழைப்பவனா?'' என்று ஏளனமாகக் கேட்டான்.

மாயமந்திரவாதி அந்த அமைச் சனை முறைத்துப் பார்த்தான். பிறகு தன் தடியால் அருகிலிருந்த மரத்தை ஒரு தட்டு தட்டினான். மறு வினாடியே அந்த மரம் தீப்பற்றி எரிந்து போயிற்று. அதைக் கண்டு ஜீவகுப்தன் அமர்ந்திருந்த குதிரை மிரண்டு துள்ளித் துள்ளி ஓடி விட்டது. இதைக் கண்ட காளிவர்மன் மாய மந்திரவாதியை அணுகி'' ஐயா, நான் தங்களைச் சாதாரணமாக எண்ணி விட்டேன். இந்தக் கொடியவன் ஜீவ குப்தனை அடக் கியது போல ஜிதகேதுவையும்



உங்கள் மந்திர சக்தியால் முடக்க வேண்டும். இவர்கள் உங்களைப் பார்த்து நடுங்கி நாட்டை நல்ல விதமாக ஆள வேண்டும். இதைச் செய்வீர்களா?'' என்று கேட்டான்.

மாயமந்திரவாதியும் ''நீ துணிச்சலும் பலமும் கொண்டவன் மட்டும் அல்ல. புத்திசாலியும் கூட. நானும் இதையே நினைத்தேன். நீ அதைச் சொல்லிவிட்டாய்.'' எனக்கூறினான். பிறகு ஜீவகுப்தனைப் பார்த்து ''என் சக்தி எவ்வளவு என்று தெரிந்து கொண்டாயா? உம். என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான் ஜீவகுப்தனோ நடுநடுங்கிக் கொண்டிருந்தான். என்ன சொல்வது என்று கூட அவனுக்குத் தெரியவில்லை. ஆனாலும் ஒருவாறாகச் சமாளித்துக் கொண்டு ''ஐயா! மாயமந்திரவாதியாரே உங்கள் சக்தியை நேரிலேயே கண்டேனே. நீங்கள் அரண்மனைக்கு வந்து ஜிதகேது மன்னருக்கு அறிவுரைகளையும் யோசனைகளையும் கூறலாம்'' என்றான்.

மாயமந்திரவாதியும் ''இப்போது தான் அய்யாவுக்கு ஞானோதயம் ஏற்பட்டிருக்கிறதோ! இதற்கு முன் எப்படித்துள்ளினாய்? இப்போது அதெல்லாம் என்ன ஆயிற்று? நான் தலை நகருக்கு வருவது ஒருபுறம் இருக்கட்டும் இப்போது உன்னை கவனிக்கிறேன்'' என்றான்.

காளிவர்மனோ ''அடடா! இந்த அமைச்சரா இப்படி இறங்கி வந்து விட்டார்!'' எனக் கூறி சுற்றிலும் உள்ளவர்களைப் பார்த்தான். யாரும் எதுவும் பேசவில்லை. தலை குனிந்து கொண்டிருந்தார்கள். அப்போது மாயமந்திரவாதி தன் கைத்தடியை உயர்த்தியவாறே தலையாரியைப் பார்த்து ''உனக்குத் தலையை வெட்டுவதோடு அதை வெட்டுண்ட உடலோடு சேர்த்து வைத்துத் தைக்கவும் தெரிந்திருக்குமே. இங்கே கிடக்கும் அவன் தலையை வைத்து தைத்து ஒரு குதிரை மீது அதைக் கட்டி விடு'' என்றான்.

தலையாரியும் மாயமந்திரவாதி கூறியபடியே செய்து அந்தப் படைத் தலைவனின் உடலை ஒரு குதிரையின் மீது வைத்துக் கட்டினான். ஆனால் பதட்டப்பட்டு தலையைத் திருப்பி வைத்து உடலில் தைத்து விட்டான். அதைக் கண்டு எல்லோரும் சிரித்தார்கள். ஜீவ குப்தனின் முகமோ கடுகடுவென இருந்தது. மாயமந்திரவாதி இதை கவனித்து

விட்டான். அவன் ஜீவகுப்தனிடம் ''நீ இந்தத் தலையாரியின் வாகனமான எருமைக் கடாமீது ஏறிக்கொள். தலையாரி உன் குதிரை மீது ஏறிக் கொள்ளட்டும்'' என்று அதிகாரக் குரலில் சொல்லவே ஜீவ குப்தனும் அவன் கூறியது போலவே செய்தான். இதன் பிறகு மாயமந்திரவாதி ''சரி. இப்படியே எல்லோரும் தலை நகருக்குப் போக வேண்டும்'' என்றான்.

ஜீவகுப்தனுக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. மாயமந்திர வாதியையோ அல்லது காளிவர் மனையோ என்ன செய்வது என்று அவன் யோசித்தான். தன்னால் எதுவும் செய்ய முடியாது என்பதை உணர்ந்து அவன் தலை குனிந்து கொண்டு பேசாமல் இருந்தான்.

அதைக் கண்ட மாயமந்திரவாதி ''ஜீவகுப்தா! எங்கே போயிற்று உன் ஆர்ப்பாட்டம்? ஏன் வாய் திறந்து ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை? உன் கையாலாகாத தனத்தை உணர்ந்தாயா? துள்ளின மாடு பொதி சுமக்கும் என்ற பழமொழியை எப்போதாவது நீ கேட்டிருக் கிறாயா?'' என்று அவனை உற்றுப் பார்த்தவாறே அதட்டிக் கேட்டான்.

ஜீவகுப்தன் ஏற்கனவே மாய மந்திரவாதியைப் பார்த்து நடு நடுங்கிக் கொண்டிருந்தான். மாய மந்திரவாதி இவ்வாறு அதட்டியதும் அவனால் எதுவும் பேச முடிய வில்லை. உடலே 'கிடுகிடு'வென்று நடுங்கலாயிற்று.

அமைச்சன் ஜீவ குப்தன் இவ்வாறு அவமானப் படுவதைக் கண்டு காளிவர்மன் மகிழ்ந்து போனான். அவன் ''ஆகா! இந்த ஊர்வலம் தலை நகரின் தெருக்களில் செல்லும் போது மக்கள் இதைக் கண்டு எவ்வளவு மகிழ்ச்சி அடைவார்கள்! சரி இனி நான் என் ஊருக்குப் போகிறேன்'' என்று கூறி தன் குதிரையைத் திருப்பலானான்.

அப்போது மாயமந்திரவாதி ''காளி வர்மா! என் கட்டளையை நீ கேட்க வில்லையா?'' என்று கூறித் தன் மந்திரத்தடியை உயர்த்தினான்.

தொடரும்.





நவீன
வேதாளக்
கதை

# கொடுத்த வாக்கு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைத் தூக்கிச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் இப்படி சிரமப் பட்டு விடா முயற்சியாகச் செயல்படுவதைப் பார்த்தால் உன் நல்ல குணத்தைப் பயன்படுத்திக் கொண்டு யாரோ உன்னை இதைச் செய்து தருமாறு தூண்டி இருக்க வேண்டும் என்றே நினைக்கிறேன். உன்னைப்போல சிக்கிக் கொண்ட ஆனந்தன் என்ப



வனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

வெகுநாட்களுக்கு முன் சத்திய கிரியைச் சத்தியகீர்த்தி என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது ஒரே மகன் ஜெயசீலன். மன்னன் தன் மகனுக்குக் கல்வி அளிக்க அவனை கோவிந்தாச் சாரியார் என்பவரின் குருகுலத்தில் கொண்டு போய்ச் சேர்த்தான். அந்த குருகுலத்தில் பத்து மாணவர்கள் இருந்தார்கள். ஜெயசீலன் அரசகு மாரன் என்ற காரணத்தால் மற்ற மாணவர்கள் அவனுடன் நெருங்கிப் பழகாமல் சற்று விலகியே இருந்தார் கள். அதற்கு ஏற்ப ஜெயசீலன் தான் அரச குமாரன் என்று அகம்பாவம் கொண்டு நடந்து வந்தான்.

இப்படி இருந்தும் ஆனந்தன் என்பவன் மட்டும் வலியச் சென்று ஜெயசீலனிடம் பேசிப் பழகலா னான். ஜெயசீலன் அவனைத் திட்டி தாழ்வாக எண்ணி முட்டாள் தனமாக நடந்து வந்தாலும் ஆனந்தன் அவற்றை எல்லாப் பொறுமையுடன் சகித்துக் கொண்டு அவனுடன் அன்பாகப் பழகவே நாளடைவில் ஜெயசீலன் அவனைத் தன் நண்ப னாகக் கருதலானான். ஆசிரியர் கூறுவது அநேகமாக ஜெயசீலனு க்குப் புரியாமலே இருக்கும். ஆனந்தன் அவனுக்குப் புரியாதன வற்றை விளக்கிப் புரிய வைக்க லானான்.

ஜெயசீலன் ஆனந்தனின் உதவி பெற்று படிப்பில் முன்னேறி வருவது கண்டு அவனது குரு மகிழ்ந்து போனார். அவர் அவனை உற்சாகப் படுத்த ''பேஷ், நீ நன்றாகவே படிக் கிறாய். இன்னமும் கொஞ்சம் சிரத் தையுடன் படித்தால் மாணவர்களில் முதல்வனாக வந்து விடலாம்'' என்றார். முதல் முறையாக குரு தன்னைப் புகழ்ந்தது கேட்டு ஜெயசீலன் ஆனந்தனிடம் ''நண்பா! உன்னால்தான் படிப்பில் முன்னேறி நம் குருவின் பாராட்டுதல்களையும் பெற்றேன். அதனால் நான் நாட்டின் மன்னனானதும் உன்னை என் முதலமைச்சராக ஆக்கிக் கொள் கிறேன். இது சத்தியம்'' என்றான்.

ஜெயசீலன் கூறியதைக் கேட்டு ஆனந்தன் மகிழ்ந்து போனான். குருவும் ஜெயசீலன் ஆனந்தனிடம் கூறியதைக் கேட்டு மகிழ்ந்து ''ஜெய சீலா! ஒருவன் செய்த நன்றியை மறக்கக் கூடாது. நீ ஆனந்தனுக்குக்



கடமை பட்டவன். இன்று நீ செய்த சத்தியத்தை நீ மறந்து விடாதே'' என்றார். ஜெயசீலனும் ''நான் அதை மறக்க மாட்டேன். நன்கு நினைவில் வைத்துக் கொண்டிருப்பேன்'' என்று கூறினான்.

குருகுலத்தில் படிப்பு முடிந்ததும் ஜெயசீலன் தலைநகருக்குக் கிளம்பி விட்டான். அவன் ஆனந்தனிடம் தான் போய் வருவதாகக் கூறி விடை பெற்றுக் கொள்ளவில்லை. ஆனந்தன் அதைப் பெரிது படுத்த வில்லை. அவன் குருவிடம் தான் மேலும் படிக்க விரும்புவதாகக் கூறவே அவரும் ''சரி. நீ விந்திய மலையிலுள்ள ஞானானந்தரின் ஆசிரமத்திற்குப் போய் உன் மேல் படிப்பைத் தொடர்'' என்று கூறி ஆசிகள் அளித்து அனுப்பினார்.

ஜெயசீலன் தலை நகருக்குப் போய்ச் சேர்ந்தான். ஆறு வருடங்கள் கழிந்த பின் அவன் நாட்டின் மன்னன் ஆனான். அவன் தான் சொல்லுகிற படி நடக்கும் துர்ஜெயன் என்பவனைத் தன் முக்கிய ஆலோசகனாக நியமித்தான். ஆட்சி பற்றி அவன் சொல்வதே ஜெயசீலனுக்கு வேத வாக்கு என்று ஆகிவிட்டது. துர்ஜெயனின் ஆலோசனைப் படி பல புதிய சட்டங்கள் அறிவிக்கப்பட்டன. இவற்றால் மக்கள் அவதியுற்றார்கள். அவற்றால் மக்கள் குழம்பி மன்னன் மீது வெறுப்பை அடைந்தார்கள். இந்த நிலையைப் பயன் படுத்திக் கொண்டு அண்டை நாட்டு மன்னன் சத்தியகிரி மீது படை எடுக்கத் திட்டமிட்டான். இதை அறிந்த ஜெயசீலன் துர்ஜெயனிடம் அதற்கு என்ன செய்வது என்று யோசனை கேட்டான்.

துர்ஜெயனும் ''இது பற்றிக் கவலையே வேண்டாம். நம் படை பலத்தை அதிகரித்துக் கொண்டு முதலில் நாமே படை எடுத்துப் போய் அவனைத் தோற்கடித்து விடலாம்'' என்றான். அப்போது ஜெயசீலன் ''படையை விரிவு படுத்தப் பணம் வேண்டுமே! அதற்கு எங்கே போவது? நம் பொக்கிஷத்தில் பணமும் இல்லையே'' என்றான். அப்போது துர்ஜெயன் ''நம் பொக்கிஷத்தை நிரப்ப ஒரு வழி உள்ளது. யட்சபர்வதம் என்ற மலையிலுள்ள சிவன் கோவில் மண்டபத்தில் ஒரு கல்லில் சில விவரங்கள் பொறிக்கப் பட்டுள்ளன. அந்த கோவிலின் எதிரே ஓடும் நதியின் மத்தியில் ஒரு சுழல்



உள்ளது. மந்திர தந்திரங்கள் தெரிந்து சாஸ்திரங்களைக் கற்ற துணிச்சலான இளைஞன் அந்த சுழலுக்குள் போய் அங்குள்ள யட்சமாயாவியை வென்றுவிட்டால் அவனுக்கு பெரும் புதையலும் எட்டுமாபெரும் சித்திகளும் கிட்டும். ஆனால் அவன் மட்டும் தோற்றுப் போனால் நரக லோகத்திற்குத் தான் போக வேண்டி வரும். அங்கு போய் வரத் தகுதி பெற்றவனையும் நான் தேர்ந்து எடுத்து விட்டேன். அவன் பெயர் ஆனந்தன். அவன் குருகுலத்து கல்வியை முடித்துக் கொண்டு மூன்று நாட்களுக்கு முன்பு தான் நம் தலை நகருக்கு வந்திருக்கிறான். அவன் நன்கு படித்த இளைஞன். துணிச்சல் மிக்கவன். தற்போது நம்மூர் பிரபல வியாபாரி நவகோடி நாராயணன் வீட்டில்தான் தங்கி இருக்கிறான். நாம் அவனை வரவழைத்து யட்ச பர்வதத்திற்கு அனுப்பலாம்'' என்றான். ஆனந்தன் என்ற பெயரைக் கேட்டதுமே ஜெயசீலன் திடுக்கிட்டான்.

ஏனெனில் அதுவரை தன் குருகுலத்து நண்பனைப் பற்றி நினைக்கவே இல்லை. அவனது பெயரைக் கேட்டதும் தான் அவனுக்கு சத்தியம் செய்து கொடுத்ததும், தன் குரு அதைக் காக்க வேண்டும் என்று கூறியதும் நினைவிற்கு வந்தது. அதனால் அவனைக் கண்டு பேசுவது எப்படி என்று தயங்கினான். பிறகு அவன் சற்று யோசித்து விட்டு துர்ஜெயனிடம் ''சரி, அந்த ஆனந்தனையே வரவழைத்து இதனைச் செய்யச் சொல்வோம். அவன் வெற்றி பெற்று வந்தால் கொஞ்சம் பணம் கொடுத்து அனுப்பி விடுவோம்'' என்று கூறினான். ஆனந்தன் வந்ததும் ஜெயசீலன் பரிவுடன் அவனது நலம் விசாரித்தான். அதன் பின் யட்ச பர்வதத்தைப் பற்றிக் கூறினான். அப்போது ஆனந்தன் ''நாம் இருவரும் ஒருவரை ஒருவர் நன்கு அறிந்தவர்களே. குருகுலத்தில் உனக்கு நான் எவ்வளவோ உதவிகளைச் செய்திருக்கிறேன். உனக்கு ஒரு ஒரு பிரச்சினை என்றால் அதை தீர்க்க நான் உதவாமலா இருந்து விடுவேன்? நான் யட்சபர்வதத்திற்குப் போய் அங்குள்ள செல்வத்தை அடைந்து கொண்டு வந்து கொடுக்கிறேன்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

அவன் யட்ச பர்வதத்திலுள்ள சிவன் கோவிலை அடைந்து அதன் எதிரே உள்ள நதியில் குதித்து

அதிலுள்ள சுழல் பகுதியை அடைந்தான். ஆனந்தனோடு சென்ற ஜெயசீலன் அவன் அந்நதியிலிருந்து எப்போது வருவான் என்று எதிர் பார்த்துக் கரையில் காத்துக் கொண்டிருந்தான். நதியிலிருந்து சற்று நேரத்தில் ஆனந்தன் முன்பிருந்ததை விட இரு மடங்கு ஒளியுடன் வந்ததை அவன் கண்டு ஆச்சரியப்பட்டான். கரைக்கு வந்த அவனிடம் ஜெயசீலன் ஆவலுடன் ''புதையல் கிடைத்ததா?'' என்று கேட்டான். ஆனந்தனும் புன்னகை புரிந்தவாறே'' என்னோடு சற்றும் பயப்படாமல் வா. அதைக் காட்டுகிறேன்'' என்று கூறி அவனது கையைப் பற்றிக் கூட்டிக் கொண்டு போய் நதிக்குள் இறங்கினான். இருவரும் சுழலுள்ள இடத்திற்குப் போய் முங்கி அடிமட்டத்திற்குச் சென்றார்கள். அங்கு தங்கமும் நவரத்தினங்களும் குவியல் குவியலாக உள்ளதை ஜெயசீலன் கண்டான். ஆனந்தனும் ஜெயசீலனிடம் ''இவற்றை எடுத்துக் கொண்டு போய் மக்கள் நலனுக்கான பணிகளைச் செய். ஆனால் இதற்குப் பரிசாக எனக்குப் பணமோ அல்லது நவரத்தினங்களோ வேண்டாம். ஆனால் நான் கேட்பதைக் கொடுக்க வேண்டும்'' என்றான். ஜெயசீலனும் ''நீ என்ன கேட்டாலும் கொடுக்கிறேன்'' எனவே ஆனந்தனும் ''நீ குருகுலத்தில் படித்தபோது எனக்குக் கொடுத்த வாக்கின்படி என்னை உன் முதல் அமைச்சராக நியமிக்க வேண்டும்'' என்றான். அதைக் கேட்ட



ஜெயசீலன் சற்றுத் திகைத்துத் தான் போனான். பிறகு கண்களில் நீர் ததும்ப அவன் ஆனந்தனின் கால்களில் விழுந்து வணங்கி ''நீ மனிதர்களின் மாணிக்கம். நீதான் இப்போது முதல் என் முதலமைச்சர். இனி நீ சொல்கிறபடி தான் நான் ஆட்சி புரிவேன்'' என்று நா தழுதழுக்கக் கூறினான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! ஆனந்தன் பெரும் செல்வத்தைக் கண்டு பிடித்து அதற்குப் பரிசாகப் பணத்தைப் பெறாமல் முதல் அமைச்சர் பதவியைக் கேட்டு வாங்கிக் கொண்டானே. இது பதவி மோகத்தாலா அல்லது சுயநலத்தாலா? இதற்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''ஆனந்தன் பதவி மோகத்தாலோ அல்லது சுயநலத் தாலோ ஜெயசீலனிடம் அந்தப் பதவியைக் கேட்டு வாங்கிக் கொள்ள வில்லை. அவனது இயல்பே பிறருக்கு உதவுவதுதான். குருகுல வாசத்தில் ஜெயசீலன் நன்கு படிக்க அவன் உதவினான்.

நாட்டில் ஆட்சி சீர் குலைந்தது கண்டு அது ஜெயசீலன் துர்ஜெயனின் யோசனைகளை ஏற்பதால் அவ்வாறு ஆகி விட்டது என நம்பினான். நிலைமையைச் சீர்திருத்தி மக்களுக்கு நன்மை புரிய வேண்டும் என்ற எண்ணத்தில் தான் அவன் ஜெயசீலனிடம் முதலமைச்சர் பதவி யைக் கேட்டு வாங்கிக் கொண்டான். அவன் தனக்கு நாடு வேண்டும், என்றோ நிலபுலன்கள் மாளிகைகள் வேண்டும் என்றோ கேட்கவில்லை. எனவே இது பதவி மோகமும் அல்ல. சுயநலமும் அல்ல மக்களுக்கு நன்மை புரிய வேண்டும் என்ற உயரிய நோக்கு'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# समाचार - झलक

## आबादी में दो की बढ़ोत्तरी



सिंगापुर के चिड़िया घर में, संकटापन्न जाति की संख्या में एक और बढ़ोत्तरी हुई है, जो संयोगवश डोन लंगूर नस्ल को जन्म देनेवाला विश्व में पहला चिड़ियाघर है । चिड़ियाघर ने एक बच्चे के जन्म की खबर भेजी है - जो कुछ ही दिनों के अन्दर जन्मा दूसरा बच्चा है। यह जाति प्रायः वियतनाम और लाओस में पायी जाती है । लंगूर के दोनों बच्चे किसी अन्य कारण से भी भारी संख्या में लोगों को आकर्षित कर रहे हैं । चिड़िया घर के अधिकारी उन बच्चों के नाम की खोज में हैं और इसके लिए उन्होंने प्रतियोगिता की घोषणा की है ।

## रेलगाड़ी में काव्य-पाठ

कुछ दिन पहले ही जमीन के आखिरी छोर, कन्याकुमारी से नई दिल्ली तक के लिए एक नई रेलगाड़ी आरम्भ की गई है, जिसका नाम तिरुकुरल एक्सप्रेस है ।

यह रेलगाडी चौथे दिन राजधानी पहुँचती है । उद्घाटन यात्रा में रेलगाडी में कन्याकुमारी के निकटस्थ कोलातूर की रहनेवाली पाँच वर्षीय पी.प्रतीक्षा भी सवार थी जिसने यात्रा के दौरान सभी बीस से कुछ अधिक डिब्बों में जाकर यात्रियों के कल्याणार्थ कुरल की कविताओं का पाठ किया । यात्रा की समाप्ति तक उसने २००० वर्ष पूर्व तिरुवल्लुवर रचित तिरुकुरल के सभी १३३० दोहों का वाचन किया ।



## இந்தியப் புராதனக் கதைகள் - 22

# மூன்றாவது வரம்

விபுலும் சந்திரகாந்தனும் நண்பர்கள். விபுல் பெரும் பணக்காரன் சந்திரகாந்தனோ ஏழை. ஆனால் ஆருயிர் நண்பர்களாதலால் இருவரும் மனம் விட்டுப் பேசிக் கொண்டிருப்பார்கள். ஒருநாள் அவர்கள் அவ்வாறு பேசிக் கொண்டிருக்கையில் ஒருவன் அவர்களை அணுகி ''நான் வெளியூரான். எனக்கு அவசரமாகப் பணம் தேவைப் படுகிறது. இந்த மோதிரத்தை விலைக்கு வாங்கிக் கொண்டு பணம் கொடுக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

விபுலும் அந்த மோதிரத்தை வாங்கிப் பார்த்தான். அதன் வைரக் கற்கள் ஜொலித்தன. அதை வாங்கிக் கொள்ளத் தீர்மானித்து அதன் விலையைப் பேசி முடித்து விட்டு அவன் ''சரி. இது உனக்கு எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டான். வெளியூர்க்காரனோ ''அதைப் பற்றி இப்போது சொல்வதற்கு இல்லை. நீங்கள் வாங்கிக் கொள்வதானால் சொல்லுங்கள். இல்லாவிட்டால் நான் வேறு யாருக்காவது விற்கிறேன்'' என்றான். விபுலுக்கு அதை விட்டு விட மனம் இல்லை. அதனால் விபுல் ''சரி. என் வீட்டிற்கு வா. பணம் கொடுகிறேன்'' என்று கூறி அவனையும் சந்திரகாந்தனையும் தன் வீட்டிற்குக் கூட்டிக் கொண்டு போனான்.

அங்கு விபுல் வெளியூரானிடம் பணத்தைக் கொடுத்தவாறே'' இந்தப் பெருந்தொகையோடு இந்த இரவு





வேளையில் நீ புறப்பட்டுச் செல்வது ஆபத்து. அதனால் இங்கே தங்கி சாப்பிட்டுத் தூங்கி விட்டு நாளைக்குக் காலையில் நீ போகலாம்'' என்றான். சந்திரகாந்தனும் ''என் நண்பன் கூறுவது சரியே. இன்றிரவு இங்கே தூங்கி விட்டு நாளை போவதே உங்களுக்கு நல்லது'' என்று கூறவே வெளியூரானும் அதற்கு இசைந்தான்.

சந்திரகாந்தன் தன் நண்பனிடம் விடை பெற்றுக் கொண்டு போய் விட்டான். விபுல் வெளியூரானுடன் சாப்பிட உட்கார்ந்தான். உணவு உண்டபின் விபுல் வெளியூரானுக்கு நிறைய மதுவைக் கொடுத்துக் குடிக்க வைத்தான். அதைக் குடித்த வெளியூர்காரன் சற்று நேரத்திற்குப் பின் போதை வெறியில் பிதற்றலானான். அந்தப் பிதற்றலில் அவன் தனக்கு அந்த மோதிரம் எப்படிக் கிடைத்தது என்பதைக் கூறினான்.

அந்த ஊரிலிருந்து சற்று தூரத்தில் உள்ள காட்டில் ஒரு மாந்திரீகன் ஒவ்வொரு அமாவாசையன்றும் வந்து ஒரு ஹோமம் செய்வானாம். ஹோமம் முடிந்ததும் அவனுக்கு மூன்று வரங்களைப் பிறருக்குக் கொடுக்கும் சக்தி வந்து விடும். அந்த மாந்திரீகனுக்கு வெளியூரான் பணி விடை செய்து அவனது அன்பிற்குப் பாத்திரமானான். மாந்திரீகனும் ஹோமம் முடிந்ததும் ஒரு சிட்டிகை சாம்பலை ஹோம குண்டத்திலிருந்து எடுத்து அவனிடம் கொடுத்து ''நீ மூன்று நொடிகளுக்குள் நீ விரும்பும் மூன்று வரங்களைக் கேள். கொடுக்கிறேன்'' என்றான். வெளியூரானுக்கு எதைக் கேட்பது என்று சட்டெனத் தெரியவில்லை. ஒரு வரமாவது கேட்போம் என்று நினைத்து அவன் ஒரு விலையுயர்ந்த வைரமோதிரத்தைக் கேட்டான். அந்த மோதிரத்தைத் தான் அவன் விபுலனுக்கு விற்றான். இதெல்லாம் வெளியூரான் குடி போதையில் கூறியது.

மறுநாள் காலையில் வெளியூரான் எழுந்து சென்றதும் விபுல் தன் நண்பன் சந்திரகாந்தனின் வீட்டிற்குப் போய் தான் தெரிந்து கொண்ட விஷயத்தை அவனிடம் கூறினான். பிறகு அவன் ''வரப்போகும் அமாவாசையன்று நாம் இருவரும் காட்டிற்குப் போய் அந்த மந்திரவாதியைப் பார்க்கப் போகிறோம். அவனுக்குப் பணிவிடைகள் செய்து ஹோமம்



முடிந்ததும் மூன்று வரங்களைக் கொடுக்கும்படி அவனிடம் கேட்கப் போகிறேன். என்ன வரங்கள் கேட்க வேண்டும் என்று யோசித்து வைத்திருப்பதால் வெளியூர்க்காரன் திகைத்தது போல இராமல் மூன்று வரங்களையும் கேட்டுப் பெற்று இன்னமும் பெரிய பணக்காரனாகி விடுவேன். அமாவாசை அன்று என்னுடன் காட்டிற்கு நீ வர வேண்டும்'' என்றான்.

சந்திரகாந்தனும் ''நண்பா! உன்னிடமோ நிறையப் பணம் இருக்கிறது. இன்னமும் பணம் வேண்டும் என்று ஏன் ஆசைப்படுகிறாய்? மேலும் மந்திரதந்திரங்களால் கிடைப்பவை நிலைத்து நிற்காததோடு ஆபத்தையும் விளைவிக்கும். அதனால் இந்த எண்ணத்தை விட்டு விடு'' என்றான் விபுலோ'' முடியாது. நான் காட்டிற்குப் போய் மாந்திரீகனை கண்டு கண்டிப்பாக வரங்களைக் கேட்டு வாங்கியே வருவேன். நீ என்னோடு வந்தே தீர வேண்டும்'' என்றான். சந்திரகாந்தனும் ''நான் எதற்குக் காட்டிற்கு வர வேண்டும்? வரங்களை வாங்கப் போகிறவன் நீ. அதனால் நீ மட்டும் போனால் போதுமே. என்னை ஏன் வரச் சொல்கிறாய்?'' என்றான்.

விபுலனோ ''நீ என் ஆருயிர் நண்பன். எனக்கு வழித் துணைக்கும் பேச்சுத் துணைக்கும் நீ வந்தால் தான் எனக்குத் திருப்தியாக இருக்கும்'' என்றான் அதைக் கேட்ட சந்திரகாந்தனும் ''நீ சொல்வது சரியே. காட்டில் உனக்கு ஏதாவது நேர்ந்தால் உனக்கு உதவலாம்'' என்றான். அதன் பின் காட்டில் விபுலனுக்குத் துணையாகப் போவதே நல்லது என்று எண்ணி அவனோடு செல்ல இசைந்தான்.

அமாவாசையன்று காட்டிற்குப் போய் மாந்திரீகனைக் கண்டு பிடித்து இருவரும் அவனை வணங்கினார்கள். மாந்திரீகனும் ''யார் நீங்கள்? என்ன வேண்டும்?'' என்று கேட்டான். விபுலும் ''நீங்கள் சக்திவாய்ந்தவர். இன்று ஹோமம் செய்யப் போகிறீர்கள். ஹோமத்தின் முடிவில் பிறருக்கு மூன்று வரங்களை கொடுக்கும் சக்தி உங்களுக்குக் கிடைக்கும். நான் உங்களுக்குப் பணிவிடை செய்து மூன்று வரங்களைப் பெற ஆசைப்படுகிறேன். நீங்கள் அவற்றைக் கொடுத்தே ஆக வேண்டும்''

என்றான். அப்போது மாந்திரீகன் ''ஓஹோ! சென்ற அமாவாசையன்று என்னிடம் மோதிரத்தைக் கேட்டு வாங்கிப் போனவன் என் ரகசியத்தை உன்னிடம் கூறி விட்டானா? அதை அறிந்து கொண்டு தான் நீ வந்திருக் கிறாயா?'' என்று கேட்டான்.

விபுலனும் ''ஆமாம். நான் உங்களுக்குப் பணிவிடை செய்யப் போகிறேன். அதற்கு பதிலாக நீங்கள் எனக்கு வரங்களைக் கொடுக்கத்தானே வேண்டும். அது தானே முறை'' என்றான். மந்திரவாதியும் 'கடகட' வென்று சிரித்து ''ஓ! முறை பற்றி எனக்கு எடுத்துக் கூறுகிறாயா? சரி எல்லாம் முறையாகவே நடக்கும்'' எனக் கூறி மாந்திரீகன் ஹோமத்தைச் செய்ய விபுலும் அப்போது அவனு க்குக் குற்றேவல்கள் புரிந்தான். ஹோமம் முடிந்தது. மாந்திரீகன் சிட்டிகை சாம்பலை எடுத்து விபுலிடம் கொடுத்து ''மூன்று நொடிகளுள் மூன்று வரங்களைக் கேள்'' என்று கூறினான்.

விபுலும் 'மளமள'வென்று மூன்று வரங்களைக் கேட்டான். மாந்திரீகனும் ''சரி நீ கேட்டவற்றைக் கொடுத்தேன். இனி நீ போகலாம். அவை பலிக்கும்'' என்றான். விபுலும் சற்று தூரத்தில் நின்று கொண்டிருந்த தன் நண்பன் சந்திரகாந்தனிடம் ''நான் மூன்று வரங்களை வாங்கி வந்து விட்டேன்'' என்றான். சந்திரகாந்தனும் ''அப்படி யா? அவை என்னென்ன?'' என்று கேட்டான். விபுலனும் ''என் முதலாவது வரம் நான் ஒரு மன்னனாக வேண்டும் என்பது'' என்றான். சந்திரகாந்தனும் ''சரி. மன்னனாகி விடுவாய். இரண்டாவது வரம் என்ன?'' என்று கேட்டான். விபுலும் எனக்கு எந்த நோய் நொடியும் வரக்கூடாது என்பதே'' என்றான். சந்திரகாந்தனும் ''ரொம்ப சரி. மூன்றாவது வரம் என்ன?'' என்று கேட்டான்.

விபுலும் ''நான் கிழவனாகாமல் இதே நிலையில்தான் இறக்க வேண்டும்'' என்று கூறி முடித்ததுமே அவன் சந்திரகாந்தன் மீது சாய்ந்து விட்டான். ஆம் அதே நிலையில் விபுல் இறந்து தான் போயிருந்தான். சந்திரகாந்தன் அவனுக்காகக் கண்ணீர் விட்டான்!



# பதினெட்டு ஒரு மர்மக் குறி!

அமெரிக்காவின் ஹாலிவுட்டில் 1945 ஜூலை 30 அதிகாலை வேளையில் ஒரு வேன் தான் அந்தச் சாலையில் போய் கொண்டிருந்தது. அப்போது திடீரென ஒரு புதரிலிருந்து வந்த இருவர் அச்சாலையின் குறுக்கே நின்று அந்த வேனை நிறுத்தி அதிலிருந்த இருவர் கண்களைக் கட்டி வாயில் துணி அடைத்து ஒரு மரத்தில் கட்டி விட்டு துப்பாக்கி முனையில் வேனில் இருந்த ஆறு மூட்டை வெள்ளி நாணயங்களையும் ஒரு பெட்டி நிறைய இருந்த புத்தம் புதிய டாலர் நோட்டுகளையும் கொள்ளை அடித்துக் கொண்டு ஒரு காரில் போய் விட்டார்கள். கொள்ளைக் காரர்களில் ஒருவன் ஒல்லியாய் உயரமாய் இருந்தான். மற்றவன் கட்டை குட்டையாக இருந்தான்.



இது பகலில் நல்ல வெளிச்சத்தில் நடந்த வழி பறி. அந்த வேன் ஹாலிவுட் வங்கிக்குச் சொந்த மானது. அதில் பணத்தோடு சென்ற வங்கி ஊழியர்கள் இருவரைக் கட்டிப் போட்டுத் தான் கொள்ளைக் காரர்கள் பணத்தோடு தலை மறைவாகி விட்டார்கள். பின்னர் அவ் வழியே வந்தவர்கள் கட்டப்பட்டுக் கிடந்த வங்கி ஊழியர்களின் கட்டுகளை அவிழ்த்து விடுவித்தார்கள். அந்த வேனில் அந்த இரு ஊழியர் களும் எடுத்துச் சென்ற பணம் லாக்ஹீட் கம்பெனி ஊழியர்களுக்கு கொடுக்கப்பட இருந்த அம்மாதத்திய சம்பளத் தொகை. ஆனால் வழிப்பறி கண் மூடிக் கண் திறக்கும் ஒரு நொடியில் நடந்துவிட்டதால் அவர் கள் திகைத்துக் கட்டுண்டு கிடந்தனர்.

கொள்ளைக்காரர்கள் மீது வழிப் பறி செய்தல், ஆள் கடத்தல் என்ற குற்றங்கள் சாட்டப் பட்டன. கொள்ளை போன பணத்தையும் கொள்ளைக்காரர்கள் இருவரையும் விரைவில் கண்டு பிடித்தாக வேண்டும். இது போலீசாருக்கும் துப்பறியும் துறையினருக்கும் விடுக்கப்பட்ட ஒரு சவாலே தான்.

கொள்ளைக்காரர்கள் ஏதாவது தடயத்தை விட்டுச் சென்றார்களா?



அவர்களைப் பற்றி வங்கி ஊழியர்கள் இருவரிடமும் மற்றும் பலரிடமும் விசாரித்தார்கள். வங்கி ஊழியர்களில் ஒருவர் தம் கண்களை அவர்கள் கட்டு முன் கட்டை குட்டையான மனிதனின் சட்டையில் லாக்ஹீட் நிறுவனத்தின் சின்னம் இருந்ததைக் கவனித்ததாகக் கூறினார். ஒரு வேளை அதை அணிந்திருந்தவன் அந்நிறுவனத்தில் பணி புரிபவனோ?

ஒருநாள் காவல் துறை அதிகாரி ஓரிடத்தில் கேட்பாற்றுக் கிடந்த ஒரு காரைக் கண்டார். அதில் கிடைத்த ஒரு துண்டு காகிதத்தில் ஒருவர் பெயரும் முகவரியும் எழுதப் பட்டிருந்தது. அந்த முகவரியிலிருந்த வீட்டிற்குக் காவல் அதிகாரி போய்க் கதவைத் தட்டியதும் ஒரு பெண்மணி கதவைத் திறந்து வந்து அவரை ஆச்சரியத்துடன் பார்த்தாள். பிறகு ஏதோ விசாரணைக்காக அவர் வந்திருக்கிறார் எனத் தெரிந்து கொண்ட ரப்லாட் என்ற அவள் ''என் வீட்டில் தாராளமாக எங்கு வேண்டுமானலும் போய்ப் பாருங்கள்'' என்றாள்.

அந்த அதிகாரியும் வீட்டினுள் சுற்றிப் பார்த்து விட்டு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்த இடத்திற்குச் சென்றார். அவர்கள் விளையாடிய பந்து வீட்டின் மூலையில் கட்டப்பட்ட சிறிய அறைக்குள் விழுந்துவிட்டது. அதைத் திறக்கத் தெரியாமல் அவர்கள் திகைத்து நின்றார்கள். அப்போது அந்த அதிகாரி அந்தப் பெண்மணியிடம் ''இந்த அறையில் என்ன இருக்கிறது?'' என்று கேட்டார். அவளும் ''சில வாரங்களுக்கு முன் இதை இருவர் வாடகைக்கு எடுத்துக் கொண்டார்கள். ஆனால் கடந்த சில நாட்களாக அவர்கள் ஏனோ இங்கு வரவில்லை'' என்றாள்.

காவலதிகாரி தன் ஆட்களிடம் கதவை உடைக்கச் சொன்னார். குழந்தைகள் மகிழ்ச்சியுடன் தம் பந்தை எடுத்துக் கொண்டு ஓடினார்கள். ஆனால் காவலதிகாரியோ அங்கு கிடந்த சட்டையைக் கண்டு ஓரேயடியாக மகிழ்ந்து போனார். ஏனெனில் அதில் லாக்ஹீட் நிறுவனத்தின் சின்னம் இருந்தது. அது மட்டுமல்ல. அந்த அறையில் தானியங்கித் துப்பாக்கி ஒன்றும் சிறு கைத் துப்பாக்கியும் அவருக்குக் கிடைத்தன. அவை பாதுகாப்பிற்காக



அவனும் அதே நிறுவனத்தில் பணி புரிந்தவனே. ஆனால் இருவரும் அந்நிறுவனத்தின் முன்னாள் பணியாட்களே.

காவலதிகாரிக்கு அவர்களது போட்டோக்கள் கிடைத்தன. அவற்றைக் கொண்டு ஜான்சனை முதலில் பிடித்து விட்டார். பிறகு ஹார்டியும் அகப்பட்டான். இருவரும் சிறையில் அடைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டனர். அவர்களோ தமக்கு எதுவுமே தெரியாது என்று ஒரேயடியாகச் சாதித்தார்கள். அவர்கள் இருக்கும் இடத்தைச் சோதனை போட்டதில் ஒரு கண்ணாடி டம்ளரில் ஒரு டாலர் நோட்டு போடப்பட்டிருப்பது கண்டு காவலதிகாரி ஆச்சரியப்பட்டார்.

வங்கி ஊழியர்கள் இருவரும் தம்மோடு வைத்திருந்தவை.

காவலதிகாரி சட்டையின் சின்னத்தின் நம்பரைப் பார்த்தார். அது அந்த நிறுவன ஏடுகளிலிருந்த நம்பர்களில் எதுவும் இல்லை எனக் கண்டு அது போலியானது என உறுதி செய்து கொண்டார். அந்த சட்டையை ரசாயனப் பரிசோதனை செய்ததில் போலி நம்பருக்குக் கீழ் உண்மையான நம்பர் இருப்பது தெரிந்தது. அந்த நம்பர் எந்தத் தொழிலாளிக்குக் கொடுக்கப்பட்டது என்று பார்த்ததில் அது ஒல்லியான உயரமாயுள்ள ஜான்சனுக்கு என்பது தெரிந்தது. கட்டை குட்டையான மற்றவன் ஹார்டி. அவன் ஜான்சனின் நண்பன்.

அவர்களைக் காவலதிகாரி விசாரிக்க வேண்டிய 'முறை'யில் விசாரிக்கவே முடிவில் அவர்கள் வங்கிப் பணத்தைக் கொள்ளை அடித்ததை ஒப்புக் கொண்டார்கள். ஆனால் அதை எங்கு வைத்திருக்கிறார்கள் என்பதைச் சொல்ல மறுத்தார்கள். எனவே அவர்கள் சிறையில் தனித்தனி அறைகளில் அடைக்கப்பட்டார்கள். அவர்கள் ரகசியமாக அனுப்பிக் கொண்டிருந்த செய்திகள் கவனிக்கப்பட்டு ஆராயப்பட்டன. கண்ணாடி டம்ளரில் டாலர் நோட்டை அவர்கள் போட்டு வைத்திருந்தது அது எவ்வளவு நாட்கள் வரை கெடாமல் இருக்கிறது என்ப

தைக் காணத்தான் என்று காவலதிகாரி ஊகித்தார்.

அவர்கள் இருவரும் அனுப்பிக் கொண்ட ரகசியச் செய்திகளில் 18 என்ற எண் பல முறைகளில் அடிபட்டது. ஒரு செய்தியில் "நாம் வெகு நாட்கள் இங்கேயே இருந்தால் நம் பத்திரங்கள் கெட்டுப் பயனற்றதாகி விடும்" என்பது. இன்னொரு செய்தி "இளம் சகோதரி எடுத்து வைக்கலாம். ஆனால் அவள் அங்கு எப்படி..?" என்றிருந்தது.

பத்திரம், சகோதரி, 18 இவை எல்லாம் என்ன? பத்திரங்கள் என்றால் டாலர் எனக் கொள்ளலாம். இளம் சகோதரி என்றால் சிறு பெண் என ஊகிக்கலாம். ஆனால் 18 என்பது ஏதாவது ஒரு தெருவிற்குக் கொடுக்கபட்ட நம்பரோ? காவலதிகாரிகளும் துப்பறிபவர்களும் அப்படி ஏதாவது ஒரு சாலை உள்ளதா என்று தேடினார்கள். ஒரு சாலை அந்த எண்ணில் கிடைத்தது. அதைப் பார்த்த போது ஒரு ஒற்றையடிப் பாதை முள் கம்பி வேலி போடப் பட்ட இடத்திற்குக் கொண்டு போய் விட்டது. அந்த வேலியின் உயரம் பத்து அடி அது ஒரு பழைய இடுகாடு. மயான இடம். அந்த இடத்தை ஒரு சிறு பெண்ணால் அடைய முடியாது தான். காவலதிகாரிகள் அந்த மயானத் துள் சென்று ஒவ்வொரு கல்லறையாகப் பார்த்தனர். ஒரு கல்லறையில் 1818 என்ற ஆண்டு கல்லில் பொறிக்கப்பட்டிருந்தது. அதனருகே மண் குவியலும் அதன் மீது இலைகளும் போடப்பட்டு இருந்தன. காவல் வீரர்கள் அந்த இடத்தைத் தோண்டவே அங்கு ஆறு பைகளில் வெள்ளி நாணயங்களும், ஒரு பெட்டி நிறையப் புத்தம் புது டாலர் நோட்டுகளும் அகப்பட்டன.

இதைச் சிறையில் காவலதிகாரி ஜான்சனிடமும் ஹார்டியிடமும் கூறியதும் அவர்கள் திகைத்துத் 'திரு திரு'வென்று விழித்தார்கள்.



## குஜராத் மாநில நாட்டுப் புறக் கதை

# விதூஷகனின் பந்தயம்



வெகு காலத்திற்கு முன் வினயராஜ் என்ற மன்னன் இருந்தான். சதுரங்கம் ஆடுவது என்றால் அவனுக்கு மிகவும் பிடிக்கும். ஆனால் அவனுக்குச் சரிசமமாக உட்கார்ந்து விளையாட யாருக்கும் துணிச்சல் இல்லை. ஆனால் விதூஷகன் மாதவன் ஒருவன் தான் அந்த மன்னனோடு சகஜமாக சிரித்துப் பேசி சதுரங்கம் விளையாடி வந்தான். மன்னன் ஆட்டத்தில் பெருந்தொகைகளைப் பந்தயமாகக் கட்டித் தோற்றாலும் அது தனது விதூஷகனுக்குத் தானே போகிறது என்று திருப்தி அடைவான். விதூஷகனால் சொற்ப தொகையையே பந்தயம் கட்ட முடியும். ஆயினும் மன்னன் அதற்கும் சம்மதித்து ஆட்டத்தைத் தொடங்குவான். அதற்குக் காரணம் விதூஷகன் எப்படி ஆடுகிறான் என்பதை கவனித்து அதைக் கற்று வந்தது தான்.

சதுரங்கம் ஆடும் போது தான் மன்னன் என்பதை மறந்து விடுவான். விதூஷகனும் தான் அவனிடம் பணிபுரிபவன் என்பதை மறந்து தனக்குச் சமமானவன் என்று எண்ணி பயமில்லாமல் விளையாடுவான். இதனால் விளையாட்டு சுவாரசியமாக இருக்கும்.

ஒருநாள் மன்னனும் விதூஷகனும் சதுரங்கம் ஆடிக்கொண்டிருக்கும் போது விதூஷகனை அவசரமாக வீட்டிற்கு அழைத்துச் செல்ல அவனது தங்கை மோகினி அங்கு வந்தாள். மன்னன் அவளது அழகைக் கண்டு மலைத்துப் போனான். மறுநாள் மன்னன் விதூஷகனோடு சதுரங்கம் ஆட ஆரம்பிக்கும் போது அவனிடம் ''மாதவா! இன்றைய ஆட்டத்தில் நீ உன் தங்கையைப் பந்தயமாக வை. நான் நம் நாட்டின்

ஒரு பெரிய நகரத்தையே பந்தயமாக வைக்கிறேன். நீ வெற்றி பெற்றால் அந்நகரின் மன்னனாகி விடலாம். நான் வெற்றி பெற்றால் உன் தங்கையை மணந்து இந்த நாட்டின் ராணியாக்குகிறேன்'' என்றான்.

விதூஷகன் தான் சாமார்த்தியசாலி ஆயிற்றே. அவன் மன்னனிடம் ''இதில் பந்தயப் பொருள்கள் சமமாக இல்லையே. நான் என் தங்கையைப் பந்தயமாக வைத்தால் நீங்களும் உங்கள் தங்கையைப் பந்தயமாக வைக்க வேண்டும் இதற்கு உமக்கு சம்மதமா?'' என்று கேட்டான். மன்னனுக்கோ எப்படியாவது மோகினியை மணந்து கொண்டு விட வேண்டும் என்ற ஆசை. அதனால் அதற்குச் சம்மதித்தான்.

ஆட்டம் ஆரம்பமாகியது. அதில் வெற்றி பெற்று விட வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் மன்னன் கவனமாக ஆட்டத்தை ஆடலானான். அவன் வெற்றியடைய இன்னும் ஒரு காயைச் சரியாக நகர்த்தினால் வெற்றி அடைந்து விடலாம். அந்த நிலையில் தான் மோகினியை அடைந்து விட்டதாகவே எண்ணி அவன் பூரித்துப் போய் கவனத்தைச் சிதறவிட்டான். அதனால் வெற்றி அவனுக்குக் கிடைக்கவில்லை. விதூஷகன் தான் வென்றான். அப்போது அவன் மன்னனிடம் ''அரசே! நீங்கள் வாக்களித்தபடி உங்கள் தங்கையை எனக்குக் கொடுத்து மணம் செய்து வைக்க வேண்டும்'' என்றான்.

அப்போது மன்னன் ''என் தங்கையை உனக்கு மணம் செய்து வைப்பதா? அது முடியாதே. அவளுக்கு தான் ஏற்கனவே திருமணமாகி விட்டதே. அவள் கணவன் இவ்வூரில் பிரபல வியாபாரி. உனக்கு மணம் செய்து வைக்க எனக்கு வேறு தங்கை யாரும் இல்லையே'' என்றான்.

விதூஷகனோ ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீங்கள் கொடுத்த வாக்கின்படி உங்கள் தங்கையை எனக்குக் கொடுத்தே ஆக வேண்டும்'' என்றான். மன்னனும் சற்று யோசித்து ''ஆம். நாளை என் தங்கை அரண்மனைக்கு வருகிறாள். அவளாக உன்னோடு செல்லச் சம்மதிக்க மாட்டாள். உனக்கு ஒருவாய்ப்பை அளிக்கிறேன். நீ என்ன செய்வாயோ ஏது செய்வாயோ எனக்குத் தெரியாது. உன் சாமர்த்தியத்தால் அவளை நீ உன்





காப்பாற்று அண்ணா!'' என்று கத்தினாள். தன் அண்ணன் வராததால் அவள் ''யாராவது என்னைக் காப் பாற்றுங்களேன்'' என்று உரக்கக் கூவி னாள். அப்போது விதூஷகன் குதிரையிலிருந்து இறங்கி ஆற்றில் குதித்து அவளது கையைப் பிடித்துத் தூக்கிக் கொண்டு கரைக்கு வந்தான். அவன் அவளிடம் ''நான் உன் கையைப் பற்றித் தூக்கி வந்தேன். அதனால் நீ எனக்கு மனைவி யாகி விட்டாய்'' என்றான்.

அவளோ ''என் பெயர் வனிதா. நான் இந்நாட்டு மன்னனின் தங்கை. ஏற்கனவே மணமான வள்'' என்றாள். விதூஷக னோ ''எல்லாம் என் வீட்டிற்குப் போய்ப் பேசிக் கொள்ளலாம். இங்கு உன்னைத் தனியே விட்டு விட்டுப் போக மாட்டேன்'' என்று கூறி அவளைத் தன் குதிரை மீது ஏற்றி தானும் அதன் மீது அமர்ந்து தன் வீட்டிற்குக் கூட்டிச் சென்று அவளிடம் தான் யாரென்ப தையும் விவரமாகக் கூறினான். அதைக் கேட்ட வனிதா சற்று யோசித்து ''என் அண்ணனின் வாக்கை நான் காப்பாற்ற வேண்டும். நான் இதே வீட்டில் இருக்கிறேன். வரும் பௌர்ணமியன்று நம் திருமணம் நடக்கட்டும்'' என்றாள். விதூஷகனும் அதை நம்பினான்.

ஆனால் பௌர்ணமிக்கு இரண்டு நாட்களுக்கு முன் அங்கிருந்து தப்பி

வீட்டிற்குக் கூட்டிக் கொண்டு போ'' என்றான்.

மறுநாள் மன்னனின் தங்கை அரண்மனைக்கு வந்தாள். அன்று மாலை மன்னன் அவளை அழைத்துக் கொண்டு ஆற்றங்கரையோரம் சென்றான். ஆற்றில் தாமரை மலர்கள் நிறைய இருந்தன. மன்னனின் தங்கை கரையில் இருந்தபடியே எட்டி ஒரு தாமரை மலரைப் பறிக்க முயன்று தவறி ஆற்றில் விழுந்து விட்டாள். அதைக் கண்டும் மன்னன் அங்கிருந்து போய் விட்டான். முன்னேற்பாட்டின்படி விதூஷகன் குதிரை மீது அமர்ந்து அங்கு தயாராக இருந்தான். ஆற்றில் விழுந்த மன்னனின் தங்கை ''என்னைக்

நேராகத் தன் கணவனின் வீட்டிற்கு வனிதா சென்று விட்டாள். அவள் கணவனும் அவள் அரண்மனையி லிருந்து தான் திரும்பி வந்திருக் கிறாள் என்று எண்ணிக் கொண்டான். வனிதா தப்பிச் சென்று விட்டாள் என்று கண்ட விதூஷகன் நேரே அரண்மனைக்குப் போய் ''வனிதா இங்கு வந்தாளா? அல்லது தன் கணவன் வீட்டிற்குப் போயிருக்கி றாளா?'' என்று கேட்டான். மன்ன னும் ''அவள் இங்கே வரவில்லை. தன் கணவன் வீட்டிற்குத்தான் அவள் போயிருப்பாள். நீ அங்கே போய் அவளிடம் பேசி அழைத்துக் கொண்டு போ'' என்றான். விதூஷ கனும் வனிதாவின் வீட்டிற்குச் சென்றான். அங்கு அவளது கணவ னைக் கண்டு விதூஷகன் நடந்ததை எல்லாம் சொல்லி வனிதாவை தன்னோடு அனுப்பி வைக்குமாறு கேட்டான்.

வனிதாவின் கணவனோ ''வனிதா வைப் பந்தயம் வைக்க மன்னனுக்கு என்ன உரிமை உள்ளது? நீ அவளை அடைய வேண்டும் என்றால் என்னோடு வாட் போர் புரிந்து என்னை வெல்ல வேண்டும், தெரிந்ததா?'' என்று கடும் குரலில் கூறினான். விதூஷகனோ ''இது தானா? தாராளமாக நாம் இருவரும் வாட் போர் புரிவோம். அதில் வெற்றி பெறுபவர் வனிதாவை அடைய வேண்டும்'' என்றான்.

அடுத்த நாள் விதூஷகனும் வனிதாவின் கணவனும் வாட் போர் புரிந்தார்கள். அதில் வனிதாவின் கணவன் கீழே விழவே அவனது வாள் இரண்டாக ஒடிந்து ஒரு பகுதி அவனது உடலில் குத்தியது. அதனால் அவன் இறந்து போனான். விதூஷகன் அப்போது திருமணம் பற்றி எதுவும் கூறவில்லை. ஏனெனில் வனிதா கண வனை இழந்த துயரத்தில் ஆழ்ந்திருந் தாள். அதனால் ஈமக்கிரியைகள் முடியட்டும், பிறகு பேசலாம் என்று எண்ணி அவன் எதுவும் சொல்லாமல்





போய் விட்டான். சில நாட்கள் அங்கும் இங்கும் அலைந்த பின் ஓரிடத்தில் ஒரு சாதுவைக் கண்டான். அவரது அறிவுரை களைக் கேட்ட பின் அவன் மனதில் அமைதி ஏற்பட்டது. பேச்சுவாக்கில் அவர் இறந்தவர் களைக் கூட உயிர்ப்பிக்க முடியும் என்று கூறினார். அதைக் கேட்ட மாதவனுக்கு இறந்து போன வனிதாவையும் அவளது கணவனையும் உயிர்ப்பித்து விடலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. அதனால் அது பற்றி அவன் அந்த சாதுவிடம் பல கேள்விகளைக் கேட்டான். அவரோ ஒரு குறிப்பிட்ட இடத்தைச் கூறி அங்குள்ளவர்களிடம் அத்தகைய சக்திஇருப்பதாக சொன்னார். அதை எப்படிக் கற்று அடைவது என்று அவன் கேட்கவே அவரும் ''நீ அங்கே போய் அவர்களோடு சேர்ந்து வாழ்ந்து அவர்களுக்குப் பணி புரிந்து அவர்களது நம்பிக்கையைப் பெற்றால் அவர்களிடமிருந்து அச் சக்தியை அடையும் வழியைத் தெரிந்து கொள்ளலாம்'' என்றார் மாதவனும் பல நாட்கள் பயணம் செய்து அப்பகுதியை அடைந்தான். அங்கு சில பறவைகளைக் கொன்று அவற்றின் இறகுகளைப் பிய்த்து விட்டு மிகுந்த பகுதியை வேக வைத்து உண்டபின் தாம் பிய்த்து வைத்த இறகுகளையும் தோல் களையும் எடுத்துச் சேர்த்து வைத்து ஏதோ மந்திரத்தை உச்சரித்தார்கள்.

இருந்தான். வனிதாவின் கணவனின் உடல் சிதை மீது வைக்கப்பட்டு நெருப்பு மூட்டப்பட்டது. வனிதா அதை ஏழு தடவைகள் சுற்றி வந்து நன்கு எரியும் நெருப்பில் குதித்து விட்டாள். அவளது உடல் கருகிப் போயிற்று. அதைக் கண்டு விதூஷகன் மாதவன் திகைத்துப் போனான். அவன் மனம் மிகவும் வேதனைப் பட்டது. அவன் வனிதாவை மிகவும் உயர்வாக இப்போது மதிக்கலானான். அவள் தன் கணவனுக்கு உண்மை யான மனைவியாக இருந்தாள் என்பதை எண்ணி எண்ணிப் பெருமைப் பட்டான்.

அது மட்டுமல்ல, அவன் மனதில் தன்னால் தானே வனிதாவின் கணவன் உயிர் துறக்க வேண்டிய தாயிற்று என்று எண்ணி கவலைப் பட்டான். அதனால் அவன் விரக்தி அடைந்து தலை நகரை விட்டே

அந்தப் பறவைகள் மீண்டும் உயிர் பெற்று பறந்து போயின.

சாது கூறிய இடம் அதுவே என உறுதி செய்து கொண்டு அவன் அங்கேயே தங்கி அங்குள்ளவர்களு க்குப் பணி புரிந்து வந்தான். ஒருநாள் அவர்களிடம் இறந்த பறவைகளை எப்படி உயிர்ப்பிக்க முடிகிறது என்று கேட்டான். அவர்களும் அவனை ஒரு கிழவியிடம் அழைத்துப் போய் நல்லவனான அவனுக்கு மந்திரோப தேசம் செய்யும்படி வேண்டினார்கள். அவளும் அவனுக்கு மந்திரத்தைச் சொல்லி அதைப் பன்னிரெண்டு முறை சரியாகக் கூறி மனப்பாடம் செய்து கொள்ளச் செய்தாள்.

மாதவன் அதை நன்கு கற்றுக் கொண்ட பின் தன் நாட்டிற்குப் போய்த் தலை நகரை அடைந்தான். அங்கு வனிதாவும் அவள் கணவனும் எரிந்து கிடந்த இடத்தை அடைந் தான். அங்கு அவர்களது எலும்பு களைச் சேகரித்து வைத்துக் கொண்டு அவற்றின் முன் அமர்ந்து அவன் தான் கற்ற மந்திரத்தை உச்சரித்தான் வனிதாவும் அவள் கணவனும் உயிர் பெற்று எழுந்து வந்தார்கள்.

அது கண்டு விதூஷகன் மாதவன் மிக்க மகிழ்ச்சி அடைந்தான். வனிதாவின் கணவன் அவனிடம் ''மாதவா! நீங்கள் வெற்றி பெற்றீர் கள். நீங்கள் வனிதாவை ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றான். வனிதா அப் போது மௌனமாக நின்றாள். மாதவனோ அவளை ஏற்பதா அல்லது வேண்டாமா என்று யோசித்தவாறே இருந்தான்.

அப்போது அவன் முன்பு சந்தித்த சாது அங்கே வந்தார். அவர் மாதவன் தயக்கமாக இருந்ததைக் கண்டு ''மாதவா! நீ இவளுக்கு உயிர் கொடுத்து மறுபிறப்பை அளித்தாய். அதனால் நீ இவளுக்குத் தந்தை. எனவே ஒரு தந்தையின் கடமையைச் செய்'' என்று கூறினார்.

மாதவன் வனிதாவின் கரங்களைப் பிடித்து எடுத்து அவற்றை அவளது கணவனின் கைகளில் வைத்து விட்டு எதுவும் கூறாமல் அங்கிருந்து சென்றான். அவன் எங்கு சென்றான் என்று யாருக்குமே தெரியவில்லை!



# வாசகர்களுக்குக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.



**கீழ்காணும் கதையைப் படியுங்கள்**

ராயதுர்க்கத்தில் ராம்தீர்த்தன் ஒரு பணக்கார வியாபாரி. அவனிடம் பல பணியாட்கள் இருந்தனர். அவர்களில் நாராயணன் என்பவன் வீடு பெருக்குபவன்.

ஒரு நாள் தரையைப் பெருக்கும் போது அவன் ஒரு நாணயம் கிடப்பதைக் கண்டான். அவன் அதை எடுத்துத் தன் எஜமானனிடம் கொடுக்கவே அவனும் "உன் நேர்மையையும் நாணய இயல்பையும் பாராட்டு கிறேன். அதற்குப் பரிசாக அந்த நாணயத்தை நீயே வைத்துக் கொள்" என்றான்.

சில நாட்களுக்குப் பின் அந்த வீட்டில் ஒரு வைர மாலை காணாது போய் விட்டது. ராம் தீர்த்தன் பணியாட்கள் எல்லோரிடமும் விசாரிக்கவே, அவர்கள் தாம் அதைப் பார்க்கவும் இல்லை, எடுக்கவும் இல்லை என்று கூறினார்கள். கடைசியில் நாராயணனும் விசாரிக்கப்பட்டான். நாராயணன் தன் எஜமானனிடம் என்ன பதில் கூறி இருப்பான் என்று நினைக்கிறீர்கள்?

- நாராயணன் வைரமாலையைப் பார்த்தான் அல்லது பார்க்கவில்லை.
- அவன் பார்த்தான் என்றால் அதை என்ன செய்தான்?
- நாராயணன் கூறியது கேட்டு ராம் தீர்த்தன் என்ன செய்திருப்பான்?
- ராம்தீர்த்தன் தன் பணியாளுக்குப் பரிசு கொடுத்தது சரியா?

நீங்கள் உங்கள் விளக்கத்தை 100-150 சொற்களில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து உறைமீது கதைப்போட்டி என எழுதி அனுப்பவும். கீழே கொடுக்கப் பட்டுள்ள கூப்பனையும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

**முடிவு தேதி : பிப்ரவரி 29, 2004**

பெயர் ------------------------------ வயது ---------- பிறந்த தேதி ----------------

பள்ளியின் பெயர் ------------------------------------------------

வகுப்பு ---------------------- வீட்டு முகவரி ------------------------------

------------------------------------------------------------------

---------------------------------------------- பின்கோடு ----------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# முன் யோசனை!

பிரம்மதத்தன் காசியை ஆண்ட போது போதிசத்தவர். ஒரு வணிகரின் குடும்பத்தில் பிறந்தார். சிறுவயதி லேயே அவர் வியாபாரத்தின் நெளிவு சுளிவுகளை அனுபவம் மிக்க வியா பாரிகளிடமிருந்து கற்று அறிந்து கொண்டார். எந்த விஷயத்தையும் நன்கு ஆராய்ந்து அவசரப்படாமல் அவர் முடிவு எடுத்து வந்தார். அவரது வியாபாரம் பெருத்த அளவில் நான்கு திக்குகளிலும் நன்கு நடந்து வந்தது.

காசியில் மந்தமதி என்ற வியா பாரி இருந்தான். அவன் எதையும் அவசரப்பட்டு செய்பவன். ஒரு முறை போதிசத்வர் வண்டிகளில் வியாபாரச் சரக்குகளை ஏற்றிக் கொண்டு புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தார். அப்போது மந்த மதி வந்து அவரிடம் தானும் அவர் போகும் வழியில் செல்லப் போவ தால் அவரோடு சேர்ந்து தன் வண்டி களை ஓட்டிக் கொண்டு வருவதாகக் கூறினான்.

அதைக் கேட்ட போதிசத்வர் 'மந்தமதி! நம் இருவர் சரக்கு வண்டி களும் ஒரே பாதையில் செல்லும் போது சாலை அடைபட்டு மற்றவர் களின் போக்குவரத்திற்கு இடைஞ்ச லே ஏற்படும். இதைத் தவிர்க்க நம்மில் யாராவது ஒருவர் முதலில் புறப்பட வேண்டும். மற்றவர் அதற்கு நாலைந்து நாட்கள் கழித்துப் புறப் பட்டால் மற்றவர்களுக்கு நம்மால் இடைஞ்சல் இருக்காது'' என்றார்.

அப்போது மந்தமதி தன் மனதில் ''நான் முதலில் புறப்பட்டுச் சென்றால் என் சரக்குகளை விற்று லாபம் அடைவேன். முதலில் நான் சாலையில் செல்வதால் அதில் சௌகரியமாகப் பயணம் செய்ய முடியும். வழி நெடுக உள்ள புல்லை என் மாடுகள் மேய்த்து கொண்டே செல்லும். அதனால் அவற்றிற்காக நான் செய்ய வேண்டிய செலவு மிச்சம். வழியிலுள்ள மரங்களின் காய்களும் கனிகளும் எனக்கே

-ஜாதகக் கதை-



முதலில் பறித்துக் கொள்ளக் கிடைக் கும். தண்ணீரும் நன்கு கிடைக்கும். என் சரக்கு முதலில் செல்வதால் அந்தந்த ஊர்களில் நான் சொல்லும் விலைக்கே வாங்கிக் கொள்வார்கள்'' என்று எண்ணினான்.

மந்தமதி அவரிடம் தான் முதலில் சரக்குகளுடன் செல்வதாயும் பிறகு அவர் சில நாட்கள் கழித்துப் புறப்படலாம் என்று கூறவே போதிசத்வரும் அப்படியே செய்வ தாக ஒப்புக் கொண்டார். மந்தமதியும் அதற்காக மகிழ்ந்து போனான்.

மந்தமதி செல்ல வேண்டிய இடம் வெகு தூரத்தில் இருந்தது. வழியில் ஒரு பாலைவனம் வேறு இருந்தது. அதனால் பயணத்தில் அதைக் கடக்கப் போதிய நீரைப் பீப்பாய்களிலும், உணவையும் எடுத்துக் கொண்டு தன் சரக்கு வண்டிகளுடன் புறப்பட்டான். வியா பாரத்தில் தான் போதிசத்வரை முந்தி விட்டதாக எண்ணித் திருப்தி அடைந் தான். அவன் சில நாட்கள் பயணம் செய்தபின் பாலைவனப்பகுதியை அடைந்தான்.

அப்போது அவன் எதிரே ஒரு அழகிய வண்டி வந்தது. அதில் உயர் ஜாதி எருதுகள் பூட்டப்பட்டிருந்தன. அதில் ராஜா போன்ற ஒருவன் கம்பீரமாக உட்கார்ந்திருந்தான். அந்த வண்டியின் முன்னும் பின்னும் காவல்காரர்கள் வாள்கள், கத்திகள், ஈட்டிகள் என்று கைகளில் ஏந்திக் கொண்டு வந்தார்கள். வண்டியின் சக்கரங்களில் சேறு அப்பி இருந்தது. எல்லோருடைய தலைகள் மீது தாமரை காம்புகளும் கைகளில் தாமரை மலர்களும் இருந்தன.

வண்டியில் அமர்ந்திருந்த கனவான்போலிருந்தவன் ''அடேயப் பா! ஒரே மழை. அதோ தென்படும் காட்டில் நீர் நிறைந்துள்ளது. ஏரிகளில் நீர் நிறைந்து கிராமங் களுக்குள் புகுந்துவிட்டது. நீங்கள் அங்கே போவதால் உங்கள் பீப்பாய் களிலுள்ள நீரைக் கொட்டிவிட்டு புதிதாக நீரை நிரப்பிக் கொள்ளுங்கள்.'' என்று கூறினான். அந்த வண்டியில் இருந்தவனும் அவனோடு வந்த ஆட்களும் மனிதர்களைக் கொன்று தின்னும் ராட்சஸர்கள். அவ்வழியே வருபவர் களைப் பேச்சால் மயக்கி

அவர்களைத் தாகத்தாலும் பசியாலும் தவிக்கவிட்டு இறந்து போகச் செய்து அந்த உடல்களைத் தின்று விடுவார்கள்.

இதை அறியாத மந்திமதி தன் வண்டிகளில் இருந்த பீப்பாய்களில் இருந்த தண்ணீரைக் கொட்டிக் காலி செய்தான். பிறகு பயணத்தைத் தொடரவே அந்த கனவான் காட்டிய காட்டை அடைய முடியவில்லை. அவன் போகப் போக அந்தக் காடும் நகர்ந்து போய்க் கொண்டே இருந்தது. எங்கும் மழை பெய்த தடயமும் இருக்கவில்லை. மந்தமதியும் அவனது ஆட்களும் தண்ணீருக்குத் தவித்து நாவறண்டு இறந்து போனார்கள். அவர்களது வண்டிகளை இழுத்து வந்த எருதுகளும் இறந்து போயின. இறந்துபோன மனிதர்களையும் எருதுகளையும் ராட்சஸர்கள் தின்றனர். மிகுந்த எலும்புகளை அந்தப் பாலைவனத்திலேயே விட்டு விட்டுப் போனார்கள்.

மந்தமதி கிளம்பிப் போய் பதினைந்து நாட்களான பிறகே போதிசத்வர் தம் வண்டிகளில் சரக்குகளில் நீரையும் உணவையும் எடுத்துக் கொண்டு சென்றார். எல்லோரும் பாலைவனப் பகுதியை அடைந்த போது போதி சத்வர் தம் ஆட்களிடம் ''இந்தப் பகுதி அபாயகரமானது என்று கேள்விப் பட்டிருக்கிறேன். இங்கு மனிதமாமிசத்தை விரும்பி உண்ணும் ராட்சஸர்களின் நடமாட்டம் உள்ளது எனவும் கேள்விப் பட்டிருக்கிறேன். அவர்கள் பயணிகளிடம் நயமாகப் பேசி ஏமாற்றி அவர்களைத் தம் வலையில் சிக்க



வைப்பார்களாம். எனவே நீங்கள் என்னிடம் கேட்காமல் எதையும் செய்யக் கூடாது'' என்று எச்சரித்தார். அவர்கள் கொஞ்ச தூரத்தில் அழகிய வண்டியில் வரும் கனவான் போன்றவனையும் அவனது ஆட்களையும் பார்த்தார்கள்.

அந்த கனவான் போலிருந்தவன் மந்தமதியிடம் கூறியது போலவே போதிசத்வரிடம் சொன்னான். போதிசத்தவரோ ''நீங்கள் சொல்லி முடித்தாகிவிட்டதல்லவா? உங்கள் வழியே போங்கள். தண்ணீரைக் கண்ட பிறகே எங்கள் பீப்பாய் களிலுள்ள நீரைக் கொட்டிவிட்டுப் புதிதாக நிரப்பிக் கொள்வோம்'' என்றார். அதைக் கேட்ட அந்த ராட்சஸர்கள் ''உங்கள் சிரமத்தைக் குறைக்கலாம் என்று எண்ணியே இதைக் கூறினோம். இதன்படி நடப்பதும் நடக்காததும் உங்கள் இஷ்டம்'' என்று சலிப்புடன் கூறினார்கள். போதி சத்வரோ அவர்கள் கூறியதை ஏற்காததால் எதுவும் பேச முடியாமல் மௌனமாகச் சென்றார்கள். போதிசத்வரும் ''பார்த்தீர்களா? நாம் வந்த இவ்வளவு தூரத்தில் மழை பெய்யவே இல்லை. ஈரக் காற்றும் வீசவில்லை. ஆகாயத்தில் ஒரு மேகம் கூடத் தென்படவில்லை. எனவே இவர்கள் சொன்னது எல்லாம் பொய் என்றும் இவர்கள் மனிதர்களைக் கொன்று தின்னும் ராட்சஸர்கள் என்றும் புரிந்து கொண்டேன். நம்மை ஏமாற்றப் பார்த்தார்கள். முடிய வில்லை. நமக்கு முன் இங்கு வந்த மந்தமதியையும் அவனது ஆட்களையும் ஏமாற்றிக் கொன்று விட்டார்கள் போலிருக்கிறது'' என்றார்.

அவர்கள் கொஞ்சதூரம் போனதும் மனித எலும்புக் கூடுகளையும் எருதுகளின் எலும்புகளையும் கண்டார்கள். மந்தமதி கொண்டு சென்ற சரக்குகளைக் கண்டு அவர்கள் அவற்றையும் தம்மோடு எடுத்துப் போய் விற்று லாபம் அடைந்தார்கள். போதிசத்வரின் முன் யோசனையால் ஒருவர் கூட உயிர் இழக்கவில்லை.





# மகாவிஷ்ணு

**ச**த்திய விரதன் கூறியபடியே மீன் சமுத்திரத்திற்குப் போய் பெரிய மலைபோல ஆகிவிட்டது. அது ''சத்தியவிரதா! நான் இன்னமும் வளர்ந்து கொண்டே போவேனா?'' என்று கேட்டது.

சத்தியவிரதனும் அதனை வணங்கி ''மச்சாவதாரம் எடுத்த மகா விஷ்ணுவே! ஏதோ நீங்கள் புகலிடம் கேட்பது போலக் கேட்டு என்னை உய்விக்க வந்திருக்கிறீர்கள். இந்த மாதிரியான உங்களது லீலாவினோ தங்களைப் புரிந்து கொள்ளும் சக்தி என் போன்ற அற்பர்களுக்கு ஏது! எனக்காக மச்சாவதாரம் எடுத்தீர்களே'' என்றான் பணிவுடன். அப்போது மச்சாவதாரம் எடுத்த மகா விஷ்ணு ''மன்னனே! ஏழு நாட்கள் பிரளய காலமாக இருக்கப் போகிறது, அதில் எல்லாமே அழியக் கூடும். அரிய மருந்துகளும் விதைகளும் அழியக் கூடாது. அவை அழிந்தால் எதிர் காலம் ஏது? எனவே இவை காப்பாற்றப்பட வேண்டும். உனக்காக ஒரு கப்பல் விளக்கொளியுடன் அந்த இருட்டிலும் வரும். அதில் சப்தரிஷிகள் இருப்பார்கள். அந்த ஒளி அவர்களிடமிருந்து வெளிப்படுவதே. மருந்துகளையும் விதைகளையும் எடுத்துக் கொண்டு போய் அந்தக் கப்பலில் ஏற்று. நீயும் அதில் ஏறிக் கொள். அந்தக் கப்பல் ஆடி முழுகி விடாமல் நான் காப்பாற்றுகிறேன். அதற்காகத் தான் நான் இந்த மச்சாவதாரத்தை எடுத்திருக்கிறேன். பிரம்மதேவன் கண் திறக்கும் வரை அந்தக் கப்பல் கடலில் போய்க் கொண்டே இருக்கும். இந்த கல்ப



காலத்தில் நீ வைவஸ்வதன் என்ற மனுவாக இருப்பாய்" என்றார்.

சத்தியவிரதனும் பயபக்தியுடன் விஷ்ணுவைத் துதித்தவாறே நின்றான். மகாவிஷ்ணு உருவெடுத்த மீன் இறக்கைகள் கொண்டதாய் வாலை ஆட்டியவாறே கிர்'ரென உயரக் கிளம்பி ஆகாயத்தில் சென்று கீழே பாய்ந்து சமுத்திரத்தில் குதித்தது. அந்த சமயத்தில் பிரம்மா தூக்கத்திலிருந்து கண் விழித்தார். பிரளயகாலம் வந்து எங்கும் ஒரே இருட்டாக இருந்தது. ஹயக்கிரீவன் எனப்படும் சோமகாசுரன் பாதாளத்திலிருந்து கடல் மேல் மட்டத்திற்கு வந்து வௌவால் போல பிரம்மாவின் சத்திய லோகத்தை நோக்கிப் பாய்ந்தான்.

பிரம்மா கண் விழித்ததும் அவரது நான்கு முகங்களிலிருந்தும் வெள்ளை, சிவப்பு, மஞ்சள், நீலம் ஆகிய நான்கு நிற ஒளிகள் வீசி நான்கு வேதங்களாக மாறின. ஹயக்கிரீவன் பிரம்மாவின் பக்கம் விழுந்து கிடந்த அந்த நான்கு வேதங்களையும் கவர்ந்து கொண்டு சமுத்திரத்தின் அடியே பாறைகளுக்கிடையே கொண்டு போய் ஒளித்து வைத்தான்.

சோமகாசுரன் தேவர்களின் கடும் பகைவன். வேதங்கள் இல்லாவிட்டால் பிரம்மாவின் படைப்புத் தொழில் நடைபெறாது. அந்த வேதங்களைக் காக்க வந்த விஷ்ணுவின் முயற்சியை முறியடிக்க வேண்டும் என்றே ஹயக்கிரீவன் அவ்வாறு செய்தான்.

பிரளயம் ஏற்பட்டு கடல் பொங்கி நிலப்பரப்பையே மூழ்க வைக்கலாயிற்று. அப்போது சத்திய விரதன் எதிர்பார்த்த கப்பல் ஒளி அவனிருந்த இடத்திலிருந்து வெகு தூரத்தில் நட்சத்திரம் போலத் தெரிந்தது. அது வர வரப் பெரியதாகி சத்தியவிரதனை நோக்கி வந்து கொண்டிருந்தது சப்தரிஷிகளின் ஒளிதான் அது.

விஷ்ணுவின் திருநாமத்தை ஜபித்தவாறே மருந்துகளையும் தானிய விதைகளையும் அருகே வந்த அக்கப்பலில் ஏற்றி சத்திய விரதன் அதில் தானும் ஏறிக் கொண்டான். மச்சாவதாரமாக வந்த மீன் அக்கப்பலைத் தன் பக்க முட்களால் கொம்பு போல முட்டுக் கொடுத்தது. அதில் மிகப் பெரிய முள் கொம்பு போல நீண்டு இருக்க அதனைச் சுற்றி இருந்த மாபெரும் பாம்பு கப்பலைக் கயறு கொண்டு கட்டுவது போலச் சுற்றிக் கொண்டது. அது தன் படத்தை



விரித்து வேகமான காற்று கப்பல் மீது படாமல் தடுத்தது. மீனோ பலமாகத் துள்ளி கப்பலை வேகமாகச் செலுத் தியது. துருவ நட்சத்திர திக்கில் கப்பல் வட துருவத்தை நோக்கி வேகமாகச் சென்றது.

சமுத்திரத்தின் அடியில் வேதங் களை ஒளித்து வைத்த சோமகாசுரன் அதற்குக் காவலாக இருந்தான். நான்கு வேதங்களும் நான்கு குழந்தை களாக மாறி 'குவா', 'குவா'வென அழத் தொடங்கின. மச்சாவதாரம் எடுத்த மகாவிஷ்ணு அந்த நான்கு வேதங்களைத் தேடிக் கொண்டு சென்றார்.

மாபெரும் மீன் ஒன்று வருவது கண்டு முதலில் பயந்து போன சோமகாசூரன் சட்டெனத் தன் கதையைத் தூக்கிக் கொண்டு அதனை எதிர்க்கலானான். மீன் உருவிலிருந்த மகாவிஷ்ணு இடுப்பு வரை மீனாக வும் அதற்கு மேல் நான்கு கைகளைக் கொண்டவராயும் ஆனார். மச்ச மூர்த்தியான விஷ்ணுவிற்கும் சோம காசுரனுக்கும் கடும் போர் மூண்டது. சோமகாசுரன் கடலடியே ஓடிப் பதுங்க முயன்றான். ஆனால் விஷ்ணு வின் சக்கராயுதம் அவனைத் துரத்தி அடித்து சுக்கல் சுக்கலாக நறுக்கியது. அவன் அழிந்த பிறகு மகாவிஷ்ணு குழந்தைகளாக இருந்த நான்கு வேதங்களை எடுத்துக் கொண்டு கடல் மட்டத்திற்கு மேல் வந்தார்.

விஷ்ணுவின் மச்சாவதாரத்தைக் கண்ட சத்திய விரதனும் மாபெரும் பாம்பும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து கைகூப்பி மெய் மறந்து அவரைத் துதி செய்தார்கள். பிரளய வேகம் தணிந்து கடல் அமைதியாகி நிலப் பரப்பு தெரிந்தது. கப்பலும் அது நிற்க வேண்டிய இடத்தைப் போய் அடைந்தது.

பிரம்மாவிற்குப் பகலும் இரவும் ஒரே அளவு கொண்டதுதான். அவர் தூங்கி முடிக்கும் காலம் முடிந்தது. விடியும் வேளை வந்து ஒளி விட்டு புதிய கல்பம் ஆரம்பமாகியது. சரஸ்வதிதேவி தன் வீணையில் பூபாளராகம் வாசித்தாள். பிரம்மா கண் விழித்துப் பார்த்தார். வேதங்கள் காணப்படவில்லை. என்ன செய்வது என அவர் திகைத்துப் போனார். அப்போது விஷ்ணு வந்து அவரிடம் வேதங்களை ஒப்படைத்தார்.

பிரம்மா மகாவிஷ்ணுவின் மச்சாவ தார ரூபம் கண்டு கை கூப்பி ''நாராயணா! உங்கள் மச்சாவதார



ரூபத்தை தியானம் செய்பவர்களுக்கு ஆபத்துகள் நீங்கி அஞ்ஞானம் அழிந்து, ஞான ஒளி தோன்றும்'' எனக் கூறித் துதி செய்தார்.

மச்சாவதாரம் எடுத்த நோக்கம் முடிவடைந்ததால் மகாவிஷ்ணு மறைந்து தன் வைகுண்ட லோகத்தை அடைந்தார். பிரம்மா வேதங்களை அடைந்த பின் தம் சிருஷ்டித் தொழிலில் ஈடுபட்டார். புதிய கல்ப காலத்தில் விவஸ்வந்தன் என்ற பெயரோடு உதயமான சூரிய தேவனின் புதல்வனாக சத்திய விரதன் பிறந்து வைவஸ்வதமனு என்ற பெயர் பெற்றான்.

சப்தரிஷிகள் ஆகாயத்தில் சென்று ஒரு மண்டலமாகி துருவ நட்சத் திரத்தைச் சுற்றி வரலாயினர். இவ் வாறு சூதர் கூறவே முனிவர்கள் ''அந்த துருவனின் வரலாற்றைக் கூறுங்கள்'' எனக் வேண்டினார்கள். சூதரும் துருவ சரிதத்தைத் தொடங் கினார். சப்த உலகங்களின் மிக உயர்ந்த இடம் துருவ மண்டலம். அது தான் மகாவிஷ்ணுவின் சிரம் இருக்கும் இடமும். அவரது தலை மீது இருந்து ஒளி விடும் பாக்கியம் பெற்ற துருவன் சிறுவனாக இருக்கும்போது உத்தான பாதன் என்ற மன்னனின் மகனாகப் பிறந் தான். துருவனின் தாயார் சுநீதி உத்தான பாதனின் முதல் மனைவி. சுருசி இளைய மனைவி. மன்னனு க்கு சுருசியின் மீதுதான் மிகவும் பிரியம்.

ஒரு நாள் உத்தானபாதன் சுருசியின் மகனான உத்தமனைத் தன் மடி மீது உட்கார வைத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தான். அப்போது அங்கு வந்த துருவன் மன்னனின் மடி மீது உட்காரப் போனான். அப்போது சுருசி அங்கே இருந்தாள் அவளுக்கு துருவனைக் கண்டால் பிடிக்காது.

அவள் துருவனைத் தடுத்து ''அதிர்ஷ்டம் இல்லாதவர்களுக்குப் பிறந்தால் இப்படிப்பட்ட உயர்ந்த இடம் எல்லாம் கிடைக்காது. நீ என்ன தவம் செய்தாலும் என் மகனுக்குச் சமமாக உன் தந்தையின் மடிமீது அமர முடியாது. நீ என் வயிற் றில் பிறந்தவனாக இருந்தால்தான் இந்த அதிர்ஷ்டம் கிட்டும். நீ தான் நாராயணனை பக்தியுடன் வழிபடு கிறாயே. அவரிடம் வேண்டிப் பார்'' என்றாள். துருவனின் மனம் வேத னைப்பட்டது. ஆனால் சிற்றன்னை நாராயணனை வேண்டிப் பார் என்று கூறியது அவன் மனதில் நன்கு பதிந்து

விட்டது. அவன் சுருசியை வணங்கி அங்கிருந்து போய்விட்டான். உத்தானபாதன் எதுவுமே பேசாது கற்சிலை போல இருந்தான்.

சுருசியும் ''பையன் நல்லவன் தான். என்ன கடுஞ்சொல் கூறினாலும் அமைதியுடன் போகிறானே ஓ! நான் அவன் தாயைவிட உயர்ந்தவள் என்பதை உணர்ந்துவிட்டான் போலிருக்கிறது'' என்றாள்.

கண்ணீர் உகுத்தவாறே வந்த துருவனைக் கண்டு சுநீதி நடந்ததை அறிந்து கொண்டாள். அவள் ''ஆமாம் துருவா! வேலைக்காரியை விடக் கேவலமாகக் கருதப்படும் என் வயிற்றில் நீ பிறந்தது உனது துருதிஷ்டம்தான். நமக்கு அந்த நாராயணனே வழி காட்ட வேண்டும். உன் சிற்றன்னை கூறியது ரொம்பவும் சரி'' என்றாள்.

அப்போது துருவன் ''அப்படியானால் நான் நாராயணனான விஷ்ணு பகவானைக் குறித்துத் தவம் செய்கிறேன். எனக்கு உயர்ந்த இடமாக அவர் அளிப்பார். நான் ஏன் இன்னொருத்தியின் பிள்ளையாகப் பிறக்க வேண்டும்? என்னைப் பெற்ற நீ எவ்வளவு பாக்கியசாலி என உலகமே போற்றும்படிச் செய்கிறேன். இதற்காக நான் விஷ்ணுவைக் குறித்து தவம் செய்து வரம் கேட்கிறேன்'' என்றான்.

அவனது தாய் என்ன சொல்லியும் கேளாமல் துருவன் தவம் செய்யக் கிளம்பிவிட்டான். வழியில் நாரதர் அவனைக் கண்டு அவன் தவம்



செய்யப் போவது கேட்டு ''துருவா, அது மிகவும் கடினமானது. நீ உன் தந்தையின் மடிமீது தானே அமர வேண்டும்? என்னோடு வா. நான் சொல்லி அவர் மடியில் உன்னை உட்கார வைக்கிறேன்'' என்றார்.

துருவனோ ''வேண்டாம். எனக்கு மகாவிஷ்ணுவின் அருள் கிடைத்தாலே போதும். வேறு யார் தயவும் வேண்டாம். நான் தவம் செய்தே ஆக வேண்டும்'' என உறுதியுடன் கூறினான்.

நாரதரும் ''துருவா! நீயோ சிறுவன். தவம் செய்வது என்பது விளையாட்டல்ல. காட்டில் தனியாக இருக்கும் உன்னை சிங்கம், புலி, கரடி, போன்ற மிருகங்கள் அடித்துக் கொன்றுவிடுமே. மழை, வெயில், பனி என்றெல்லாம் சகித்துக் கொள்ள வேண்டுமே. இந்தக் கஷ்டம் எல்லாம் உனக்கு எதற்கு? நான் சொல்வதைக் கேள். பேசாமல் என்னோடு வா. உன் தந்தையிடம் சமாதானமாகச் சொல்லி உன் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன்'' என்றார். நாரத முனிவர் கூறியதைக் கேட்ட துருவன் ''முனிபுங்கவரே நான் க்ஷத்திரியன். தோல்வி அடைய விரும்பாதவன். எதற்கும் பயப்படாதவன். எனவே கொடிய மிருகங்கள் எனக் கூறி என்னை பயமுறுத்தப் பார்க்கிறீர்களா? நான் பயந்து பின் வாங்க மாட்டேன்'' என்றான்.

நாரதரும் ''துருவா! பேஷ்! நீ எப்படிப்பட்டவன் என்பதை அறியவே இப்படியெல்லாம் சொல்லிப் பார்த்தேன். உன் உறுதியைக் குலைக்க முடியாதுதான். நானும் சிறு வயதில் அவமானப்பட்டு உன்னைப் போலக் காட்டிற்குப் போய்த் தவம் புரிந்தவன்தான். நீ மதுவனத்திற்குப் போய் தவம் செய். நமோ நாராயணா என்ற மந்திரத்தைக் கூறிக் கொண்டே இரு. நீ உன் முயற்சியில் வெற்றி அடைவாய்.'' எனக் கூறி அவனை ஆசீர்வதித்தார்.

சூதர் அவ்வாறு சொன்னதும் முனிவர்கள் ''நாரதரும் கஷ்டப்பட்டு அவமானப்பட்டாரா? ஏன்? அது பற்றிக் கேட்க ஆவலாக இருக்கிறோம். கூறுங்கள்'' என வேண்டினார்கள்.





அயல் நாட்டுக் கதைகள்

# ஓடி ஒழிந்த கொடிய மிருகம்

*சீனாவில் புத்தாண்டு ஆரம்ப நாள் விழாக் கொண்டாட்டங்கள் எவ்வாறு ஏற்பட்டன என விளக்கும் கதை*

வெகு காலத்திற்கு முன் சீனாவில் அழகான அமைதியாயுள்ள நகரம் ஒன்று இருந்தது. அந்த நகர மக்கள் உழைத்து வேலை செய்பவர்கள். வேலைகள் முடிந்த பின் மாலை வேளைகளில் கூட்டம் கூட்டமாகக் கூடி பேசி பொழுதைக் கழிப்பது அவர்கள் வழக்கம். கோடை காலத்தில் சிறியவர்களும் பெரியவர்களும் வீட்டின் முன் புறத்தில் அமர்ந்து காற்று வாங்குவார்கள். குளிர் காலத்திலோ அவ்வாறு இருக்க முடியாது. ஏனெனில் குளிர்மிகக் கடுமையாக இருக்கும். வீட்டினுள் நெருப்பு மூட்டி அதைச் சுற்றி உட்கார்ந்து குளிர் காய்வார்கள். அவ்வப்போது தேநீர் குடித்து உடலில் சூடு ஏற்றிக் கொள்வார்கள். ஒரு குளிர் காலத்தில் ஒரு பயங்கர சம்பவம் நிகழ்ந்தது.

அந்த சம்பவத்திற்கு முன் நகர மக்கள் பலர் ஒரு சத்திரத்தில் கூடிப் பேசிப் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தார்கள் அவ்வப்போது சூடான டீயும் குடித்துக் கொண்டும் இருந்தார்கள். பலர் தம் அனுபவங்களைக் கூறி பிறரை மகிழ்வித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது திடீரெனப் பெருத்த சத்தம் கேட்டு அனைவரும் அது என்ன என்று பார்த்தார்கள்.

ஒரு பயங்கரப் பிராணி அச்சத்திரத்துள் வந்து ஒரு விநாடிக்குள் அங்கே இருந்தவர்களை எல்லாம் கொன்றுவிட்டது. ஆனால் ஒரு இளைஞன் மட்டும் அதைக் கண்டதும் தன் நினைவை இழந்துவிழுந்துவிட்டதால் அவன் இறந்துவிட்டதாக எண்ணி அந்த பயங்கரப் பிராணி அவனது உடலை ஒன்றும் செய்யாமல் போய்விட்டது. அந்த பயங்கர நிகழ்ச்சி அந்த ஊரையே ஒரு கலக்கு கலக்கிவிட்டது. அந்த பயங்கர நிகழ்ச்சிக்குக் காரணமான நியோன் என்ற பூதத்தைப் பிடிக்க மக்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து



அதைத் தேடிப் பார்த்தார்கள். ஆனால் அது அவர்களுக்கு அகப்படவே இல்லை.

அந்த பயங்கர நிகழ்ச்சி அந்த நகரத்து மக்களை நடுங்க வைத்தது. மறுபடியும் அந்த பூதம் வந்து தங்களைக் கொன்று விடுமோ என்று பயந்து வெளியே தலை காட்டாமல் அஞ்சி வீடுகளுள் பதுங்கி இருந் தார்கள்.

அந்தக் குளிர் காலம் முழுவதிலும் அந்நகர மக்கள் வீடுகளுள்ளேயே இருந்தார்கள். மாலையானதும் தம் வீட்டுக் கதவுகளையும் ஜன்னல் களையும் இறுக மூடித்தாளிட்டு விட்டு அவர்கள் தெருப் பக்கம் வராமலேயே இருந்தார்கள். அதனால் இரவு வேளையில் அந்நகரத் தெருக் கள் வெறிச்சோடிக் கிடந்தன!

குளிர்காலம் முடிந்து வசந்த காலம் வந்தது. அந்நகர்புத்துயிர் பெற்று விட்டது. வயல்கள் பசுமை நிறைந்து காணப்பட்டன. மலர்கள் எங்கும் தென்பட்டன. இளம் தென்றல் வீசியது. மிருகங்களும் பறவைகளும் பயமில்லாமல் தம் விருப்பம் போலத் திரிந்தன. மனிதர்களும் இரவு நேரங்களில் தம் வீடுகளிலி ருந்து வெளியே வந்து நடமாடலா னார்கள். வழக்கம் போல அவர்கள் தம் விவசாயத்தில் ஈடுபட்டுவிட்ட தால் பயங்கரமிருகத்தைப் பற்றிய நினைவே இல்லாதும் போனார்கள்.

மறுபடியும் குளிர் காலம் வந்தது. கடுமையான குளிர் இருந்தது. மறுபடியும் சத்திரத்தில் அந்நகர மக்கள் கூடிக் குளிர் காய்ந்து தேநீர் குடித்துப் பேசிக் கொண்டிருந்தார் கள். அந்த ஆண்டிலும் பயங்கர மிருகம் வந்து சத்திரத்திலுள்ளவர் களைக் கொன்று விட்டுப் போய் விட்டது. அப்போதும் ஒரு இளைஞன் அதனிடம் அகப்படாமல் உயிர் தப்பினான். சென்ற ஆண்டிலும் அதனிடமிருந்து தப்பியவன் அவனே. சென்ற ஆண்டில் வந்ததும் அந்த பயங்கர மிருகம் தான் என்று அவன் எல்லோரிடமும் கூறினான்.

அந்த நகர அதிகாரியும் அப்போது நகர மக்கள் ''இந்த நியோன் பூதம் குளிர்காலத்தில் ஒரு குறிப்பிட்ட நாளில் சத்திரத்திற்கு வந்து அங்கே இருப்பவர்களைக் கொன்ற விட்டுப்

போய் விடுகிறது. அது வரும் நாளில் நாம் எச்சரிக்கையாக இருந்து அதனை அடித்துத் துரத்தி விடலாம். அதற்கான வழி காண்போம்'' என எண்ணினரார்கள். ''அந்தக் கொடிய மிருகத்தை எப்படியாவது கொன்று விட வேண்டும்'' எனவே அதுபற்றி எல்லோரும் கூடி யோசித்தார்கள். அது குளிர் காலத்தில் மட்டும் வருவதால் அந்த சமயத்தில் மட்டும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும் என்று பலர் கூறினார்கள் ஒரு முதியவர் ''சிவப்பு நிறம் கெட்ட சக்திகளை விரட்டக் கூடியது. பயங்கர ஒலிகளால் அவற்றை விட்டவும் முடியும். திடீர்திடீரென்று வெடிகளை வெடிக்கச் செய்தாலும் அவை பயந்து ஓடிவிடும். எனவே ஒரே சமயத்தில் சிவப்பு நிறத் துணி களைக் காட்டி, தாரை, தப்பட்டை களை முழக்கி, அதிர் வேட்டுகள் போட ஏதாவது செய்ய முடியுமா என்று பாருங்கள்'' என்றார். அதன் படி குளிர்காலத்தில் அந்த பயங்கரப் பிராணி வரும்போது செய்வது என்று முடிவு செய்யப்பட்டது.

கடந்த இரண்டு ஆண்டுகளில் எந்த நாளில் அந்த பயங்கரப் பிராணி வந்ததோ அந்த ஆண்டில் அதே நாளிரவில் அதை எதிர்பார்த்து முழு தயாரிப்புகளுடன் சத்திரத்தில் மக்கள் தயாராக இருந்தார்கள். திடீரென பயங்கர ஒலிகளுடன் அந்த பயங்கர மிருகம் வரவே தயாராக இருந்த இளைஞர்கள் சிவப்புத் துணிகளை ஆட்டி, தாரை தப்பட்டைகளை பலமாக அடித்து, வெடிகளை வெடித்தார்கள். அதைக் கண்ட நியான் பூதம் பயந்து நடுநடுங்கி யாரையும் எதுவும் செய்யாமல் ஓடியே போய்விட்டது.

அப்போது எல்லோரும் ''நியான் ஒழிந்தது நம் வாழ்வில் புதிய சகாப்தம் ஆரம்பமாகிறது. இதை இனி ஆண்டு தோறும் விழாவாகக் கொண்டாடுவோம்'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூவினார்கள். அதுவே சீனர்கள் கொண்டாடிய முதலாவது வருடப் பிறப்பு விழா. பயங்கரப் பிராணியின் தாக்குதலிலிருந்து விடுபட்ட நாளை அவர்கள் விழா வாக கொண்டாடி, வாழ்த்துக்கள் தெரிவித்து, பரிசுகள் அளித்து, ஆடல் பாடல்களுடன் மகிழ்ச்சியாக அன்று முழுவதும் இருக்கிறார்கள்.





# வட்டி இல்லாத கடனா?

சிவபுரியில் சிவசாமி என்பவன் ஒரு சிறிய கடை வைத்து வியாபாரம் செய்து வந்தான். நீண்ட நாட்களாக அவன் மனதில் தான் சொந்தமாக வீடு கட்டிக் கொள்ள வேண்டும் என்றே ஆசைப் பட்டுக் கொண்டிருந்தான். அவ்வூரில் நல்ல இடத்தில் வீட்டு மனை ஒன்று விலைக்கு வரவே தான் அது வரை சிறுகச் சிறுக சேர்த்து வைத்திருந்த பணத்தைக் கொண்டு அதை வாங்கிவிட்டான். அதில் வீடு கட்ட எண்ணித் தன் மனைவியிடம் ''வீடு கட்ட மனையை வாங்கி விட்டேன். அதில் முதலில் ஒரு சமையலறையும் அதை அடுத்து ஒரு சிறு அறையையும் கட்டிக் கொண்டு அங்கே குடி போய்விடலாம். பிறகு எப்போது முடியுமோ அப்போது அதைப் பெரிதாக்கி விடலாம்'' என்றான்.

அவனது மனைவியோ ''வீட்டைக் கட்டுவது என்றாகிவிட்டது. அதைச் சிறிதாக ஏன் கட்ட வேண்டும்? சற்றுப் பெரிதாக இருந்தால் நமக்கும், நம் குழந்தைகளுக்கும் பெருமையாக இருக்கும். அதனால் கட்டும்போதே வசதியாயும் சற்று பெரியதாயும் கட்ட வேண்டும். சமையலறை போக மூன்று அறைகள் ஒரு ஹால், குளியலறை என்றெல்லாம் கட்டி விடலாம். பிற்காலத்தில் நம் குழந்தைகள் படித்துப் பெரியவர்களாகவும் அது வசதியாக இருக்கும்'' என்றாள். சிவசாமியும் ''நீ சொல்கிறபடிக் கட்ட முடியுமா? கொஞ்சம் யோசித்துப் பார். நம் நிலைமை என்ன? நீ சொல்வது போலக் கட்டுவது என்றால் நிறையப் பணம் வேண்டி வருமே. அதற்கு எங்கே போவேன்?'' என்று கேட்டான்.

அவன் மனைவி கமலாவும் ''நம்மிடமுள்ள நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள் ஆகியவற்றை விற்று கட்டட வேலையை ஆரம்பிக்கலாம்.

- ரம்யா மூர்த்தி -



பணம் போதவில்லை என்றால் அப்போது கடன் வாங்கிக் கட்டலாம்'' என்றாள். அதன்படியே சிவசாமி தன் மனைவியின் நகைகளையும் விற்று வீட்டைக் கட்ட ஆரம்பித்தான். அந்தப் பணத்தைக் கொண்டு பாதி வீடுதான் கட்ட முடிந்தது. முழு வீட்டையும் கட்டி முடிக்க மேலும் பத்தாயிரம் ரூபாய் தேவைப்பட்டது.

அப்போது சிவசாமி ''உன் பேச்சைக் கேட்டு வீட்டைப் பெரிதாகக் கட்ட ஆரம்பித்து இப்போது என்ன செய்வது என்று விழிக்கிறேன். என் கையில் பணம் இல்லை. வீட்டில் இருந்ததை எல்லாம் விற்றாகி விட்டது. இனி விற்பதற்கு என்று நம்மிடம் எதுவும் இல்லை. நம் வாய் வார்த்தையை நம்பி நமக்கு யார் கடன் கொடுப்பார்கள்?'' என்று தன் மனைவியிடம் அங்கலாய்த்துக் கொண்டான்.

யாரிடம் கடன் வாங்குவது என்று யோசித்துக் கொண்டிருக்கையில் அவன் மனைவி கமலா ''இவ்வளவு பெரிய தொகையை நம்மை நம்பிக் கொடுக்க இந்த ஊரில் யாரும் இல்லை. எங்கள் ஊருக்குப் போய் என் பெரியப்பாவிடம் கேட்டால் அவர் கொடுப்பார். நாம் நாளைக்கே அங்கே போய்க் கேட்டுப் பணத்தை வாங்கி வரலாம்'' என்றாள். சிவசாமியும் அதற்குச் சம்மதிக்கவே, மறுநாள் கணவனும் மனைவியும் கமலாவின் ஊருக்குச் சென்றார்கள். கமலாவின் பெரியப்பாவும் அவர்களை அன்புடன் வரவேற்று உடல் நலம் விசாரித்தார். பிறகு அவர் ''என்ன கமலா! நீ வீடு கட்டிக் கொண்டிருக்கிறாயாமே. எனக்குச் சொல்லவே இல்லையே. கட்டி முடித்தாகி விட்டதா? எந்த மட்டில் இருக்கிறது?'' என்று கேட்டார். கமலாவும் ''உங்களிடம் சொல்லாமலா இருப்பேன் பெரியப்பா! வீட்டை முழுவதுமாகக் கட்டி முடித்து விட்டு உங்களுக்குத் தெரிவிக்கலாம் என்று எண்ணினேன். ஆனால் வீட்டைக் கட்டிப்பார், கல்யாணத்தைச் செய்து பார், அப்போது தெரியும் அவற்றின் சிரமங்கள் என்று சும்மாவா சொன்னார்கள். வீட்டைக் கட்டி விட்டு கிரகப் பிரவேசத்திற்குக் கூப்பிடலாம் என்று எண்ணினோம். ஆனால் அது சீக்கிரத்தில் நடக்குமா என்ற சந்தேகத்தில் இருக்கிறது. வீட்டைக் கட்டி முடிக்கக் கொஞ்சம் பணம் தேவைபடுகிறது. அது விஷய



என்று எதுவும் வேண்டாம்'' என்று சொன்னார். பிறகு அவர் பத்தாயிரம் ரூபாய் எடுத்து வந்து கமலாவிடம் கொடுக்கவே அதை அவள் வாங்கிக் கொண்டாள். சிவசாமியும் அவருக்கு நன்றி தெரிவித்து விரைவில் பணத்தைத் திருப்பிக் கொடுப்பதாகக் கூறினான். அதன் பின் இருவரும் அவரிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.

அவர்கள் சென்ற பின் பெரியப்பா வின் மனைவி லட்சுமி ''இவ்வளவு பெரிய தொகையை எந்த நம்பிக்கை யின் பேரில் அவர்களுக்குக் கொடுத் தீர்கள்? அதுவும் வட்டி இல்லாமலா? இந்தப் பணத்தை எப்போது அவர்கள் கொடுப்பார்களோ?'' என்று புலம்பி னாள். அவரோ ''நீ ஏன் இப்படிப் புலம்புகிறாய்? அவள் யார்? என் தம்பியின் மகள்தானே. இந்த மாதிரி சமயத்தில் அவர்கள் வேறு யாரிடத் தில் போய் பணத்தைக் கேட்பார்கள்? நம்மிடம் கேட்டால் நிச்சயமாகப் பணம் கிடைக்கும் என்று தானே வந்திருக்கிறார்கள். அதனால் தான் நான் கொடுத்தேன்'' என்றார் அதைக் கேட்ட அவரது மனைவி ''என்ன தான் உறவு என்று இருந்தாலும் பண விஷயத்தில் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். வெறும் வாய் வார்த்தையை நம்பி நீங்கள் கொடுத்த இந்த பணம் திரும்பக் கிடைக்கும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை'' என்றாள். கமலாவின் பெரியப் பாவோ ''அது வராவிட்டாலும் கவலை இல்லை. யாருக்குக் கொடுத் தேன்? என் மகளுக்குத் தானே'' என்று

மாக உங்களைப் பார்த்துப் பேசலாம் என்றே வந்தோம்'' என்றாள்.

பெரியப்பாவும் ''பணம் தானே. கொடுத்தால் போயிற்று. அது பற்றி சாவகாசமாகப் பேசலாம். முதலில் கைகால் அலம்பிக் கொண்டு சாப்பிட வாருங்கள்'' என்றார். அவர்களும் அவர் சொன்னபடியே முதலில் சாப்பிட்டனர். அதன் பிறகு அவர் கமலாவிடம் ''எவ்வளவு பணம் வேண்டும்? தயக்கப்படாமல் சொல். என் மகளுக்குக் கொடுக்காமல் வேறு யாருக்குக் கொடுக்கப் போகிறேன்'' என்றார். கமலாவும் ''தொகை கொஞ்சம் அதிகம் தான். பத்தாயிரம் ரூபாய் தேவைப்படுகிறது'' என்றாள்.

அவளது பெரியப்பாவும் ''பூ இவ்வளவுதானா? தாராளமாகக் கொடுக்கிறேன். உனக்கு எப்போது சௌகரியப்படுமோ அப்போது திருப்பிக் கொடு. இதற்கு வட்டி

கூறி அவளை அடக்கினார். இதற்கு இரண்டு மாதங்களுக்குப் பின் சிவசாமி வீடு கட்டி முடித்துவிட்ட தாகக் கூறி கமலாவின் பெரியப் பாவை கிரகப்பிரவேசத்திற்கு அழைத்தான். அவரும் தன் குடும்பத் தினருடன் சென்றார். அங்கு மற்ற உறவினர்கள் வந்திருக்கவே இரண்டு நாட்கள் தங்கி சந்தோஷமாகப் பொழுதைக் கழித்தார்.

மூன்றாவது நாள் தனிமையில் அவர் தன் மனைவியிடம் ''இன்று ஊருக்குப் போவோம்'' எனவே அவளோ ''என்ன அவசரம்? இன் னும் பத்து நாட்களில் இவ்வூர் தேர்த் திருவிழா வரப்போகிறது. நாங்கள் எல்லோரும் இருந்து பார்த்துவிட்டு வருகிறோம். பத்தாயிரம் ரூபாய் கொடுத்ததற்கு இவர்கள் வட்டி கூடக் கொடுக்கவில்லை. அதற்கு பதிலாக இவர்கள் நமக்குச் செலவு செய்யட்டு மே'' என்றாள் முகத்தைச் சுளித்துக் கொண்டே. அந்தப் பக்கமாக வந்த கமலா மறைந்து நின்று தன் பெரியப் பாவும் அவர் மனைவியும் பேசிக் கொண்டதைக் கேட்டு விட்டாள்.

கமலாவின் பெரியப்பா தன் மனைவியிடம் அன்று மாலையே எல்லோரும் ஊருக்குக் கிளம்ப வேண்டும் என்று கூறிவிட்டார். அதனால் லட்சுமியால் மறுத்துக் கூற முடியாமல் அன்று மாலை அவர் கமலாவிடம் ''கிரகப்பிரவேசம் நன்றாக நடந்தது. ரொம்ப சந்தோ ஷம். இனி நாங்கள் ஊருக்குக் கிளம்பு கிறோம்'' என்றார். அப்போது கமலா தன் பெரியப்பாவிடம் ''இப்போதே யா! என்ன அவசரம்? இன்னும் பத்து நாட்களில் தேர் திருவிழா வரப் போகி றது. நீங்கள் எல்லோரும் இருந்து பார்த்துவிட்டுப் போகலாம். நீங்கள் பத்தாயிரம் ரூபாய் கடனாகக் கொடுத் திருக்கிறீர்கள். அதற்கு நீங்கள் வட்டி வேண்டாம் என்றாலும் உங்கள் குடும்பம் இங்கே தங்குவதால் ஆகும் செலவை நான் வட்டி கொடுத்ததாக நினைத்துக் கொள்கிறேன்'' என்று கூறி லட்சுமியைப் பார்த்தாள்.

பெரியப்பா விஷயத்தைப் புரிந்து கொண்டார். லட்சுமியோ அவமானத் தால் வெட்கப்பட்டு தலை குனிந்து கொண்டாள்!






சூரப்பன் என்பவன் கிணறு, குளங்களில் யாராவது எதையாவது போட்டுவிட்டால் அவன் நீரில் மூழ்கி அதை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்து விடுவான். நீச்சல் போட்டிகளில் கலந்து கொண்டு அவன் பரிசுகளை பெற்றிருந்தான்.

ஒருமுறை அவன் தலைநகருக்குப் போய் சில நாட்கள் தங்க வேண்டி வந்தது. அதனால் தான் மிகப் பத்திர மாகப் பாதுகாத்து வந்த வெண்கல விக்கிரகத்தை அவ்வூரின் பிரபல வியாபாரியான வைரவனிடம் கொடுத்து ''இது மிக விலைஉயர்ந்த சிலை அதை இழக்க நான் விரும்பவில்லை. இது பத்திரமாக இருக்கத் தங்களிடம் இதைக் கொடுக் கிறேன். நான் தலைநகருக்குப் போய் விட்டு ஒருவாரத்திற்குப் பிறகு வந்து வாங்கிக் கொள்கிறேன்'' என்றான். வைரவனும் ''ஆகா! பத்திரமாக வைத்திருந்து நீ வந்ததும் கொடுக் கிறேன்'' என்று கூறி அதை வாங்கி வைத்து கொண்டான்.

சூரப்பன் போனதும் வைரவன் அந்தச் சிலையைப் பார்த்தான். அவன் தன் மனதில் ''இது அழகாக இருக்கிறது. இதை நானே வைத்துக் கொண்டு சூரப்பனுக்கு இதுபோல போலிச் சிலையைத் தயாரித்துக் கொடுத்து விடுகிறேன்'' எனத் தீர்மானித்துக் களிமண்ணில் அது போனற் சிலை தயாரித்து அதற்குப் பித்தளைப் பூச்சு கொடுத்து வெண் கலச்சிலை போலத் தோன்றும் படிச் செய்து விட்டான். ஒரு வாரம் கழிந்து சூரப்பன் வந்ததும் அவன் தான் தயாரித்து வைத்திருந்த களிமண் சிலையைக் கொடுத்தான்.

அதைத் தன் வீட்டிற்கு எடுத்துச் சென்ற சூரப்பன் அதில் ஏதோ மாற்றம் இருப்பதை கவனித்து அதைத் தண்ணீரில் மூக்கி எடுத்துத் துடைத்தான். அப்போது அது களி மண் சிலை என்று அவனுக்கு தெரிந்து விட்டது அவன் உடனே வைரவனிடம் அது பற்றிக் கேட்ட போது அவன்'' எனக்கு என்ன தெரியும். நீ கொடுத்தசிலையைத் தான் திருப்பிக் கொடுத்தேன். நீ அந்தச் சிலையைத் தண்ணீர் விட்டு துடைத் தாய். அந்தத் தண்ணீர் தான் அதை

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -

அப்படி மாற்றியிருக்கவேண்டும்'' என்றான்.

வைரவன் தன்னை ஏமாற்றி விட்டான் என்பது சூரப்பனுக்குத் தெரிந்து போயிற்று. அப்போது எதுவும் பேசாமல் சென்றான். அந்த ஊருக்கே குடி நீர் கொடுக்க ஒரு கிணறு தான் இருந்தது. வைரவனின் மனைவி தன் பித்தளைக் குடத்தில் நீர் சேந்திக் கொண்டிருக்கையில் கயறு அறுந்து குடம் கிணற்றின் அடியே போய் விட்டது.

அப்போது வைரவன் சூரப்பனை அழைத்து குடத்தை எடுத்துத் தருமாறு வேண்டினான். சூரப்பனும் கிணற்றில் இறங்கி தேடிப்பார்ப் பவன் போல வெகு நேரம் நீரில் இருந்து விட்டு வந்து வைரவனிடம் ''இன்று கண்டு பிடிக்க முடிய வில்லை நாளை பார்க்கிறேன்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

அன்றிரவு சூரப்பன் யார் கண்ணி லும் படாமல் ஒரு மண் குடத்துடன் அந்தக் கிணற்றில் இறங்கி அங்கிருந்த பித்தளை குடத்தில் கட்டப்பட்ட கயிறை எடுத்து மண் குடத்தில் கட்டி வைத்து விட்டு பித்தளைக் குடத்தை எடுத்துக் கொண்டு கிணற்றிலிருந்து வெளியே வந்து தன் வீட்டிற்குப் போய் விட்டான். மறுநாள் வைரவன் அவனைக் கூட்டிக் கொண்டு கிணற் றிற்குப் போனான். சூரப்பனும் கிணற்றில் இறங்கி மண் குடத்தை எடுத்து வந்து வைரவனிடம் கொடுத்து ''இந்தக் குடம் தான் கிணற்றில் இருந்தது. வேறு குடம் இருக்கவில்லை'' என்றான். வைரவ னோ ''என் குடம் பித்தளைக் குடமே'' எனவே சூரப்பன் சிரித்துக் கொண்டே ''இந்தக் கிணற்று நீர் உங்கள் பித்தளைக் குடத்தை மண் குடமாக மாற்றி இருக்கலாம்'' என்றான்.

வைரவன் தன்னைச் சூரப்பன் பழிவாங்கிவிட்டதை உணர்ந்தான். அவன் சூரப்பனிடம் ''என்னை மன்னித்து பித்தளைக் குடத்தைக் கொடுத்து விடு'' என்று கெஞ்சினான். சூரப்பனும் தன் வெண்கலச் சிலையை வாங்கிக் கொண்டு அவனது பித்தளைக் குடத்தைக் கொடுத்தான்!



# சூர்யா

வீர இளவரசனின்
துணிகரச் செயல்கள்

ஓவியம் : கரந்தி அய்யா

வீரசிம்மன் கவலையுடன் அரண்மனைப் பூஞ்சோலையில் நடந்து கொண்டிருக்கையில் அவனது பணியாள் அங்கு வந்தான்.




என் ஆட்கள் கொல்லப் பட்டார்கள்












வசந்தனுக்கு தூக்கு தண்டனை என்றே நகர் முழுவதும் பேச்சு. மறுநாள் காலையில் அவனைக் கட்டி இழுத்துக் கொண்டு போனார்கள். அப்போது பனி அடர்த்தியாக இருந்தது. வீரசிம்மன் புதிய சேனாதிபதி அமரசிம்மன், கொத்தவால் ஆகியோர் செல்வதை மக்கள் கண்டனர்.

திடீரென்று ஒரு குதிரை பாய்ந்து வந்தது. அதன்மீது இருந்தவன் முகமூடி வீரனே!







வந்த அந்த வீரன் வசந்தன் பக்கம் போய்...


அவனைக் குதிரை மீது ஏற்றி...


நொடியில் எங்கோ போய் விட்டான்


மக்கள் மகிழ்ந்து ஆர்ப்பரித்தனர். கீழே விழுந்த கொத்தவால் எழுந்திருக்க முடியாமல் அவஸ்தைப் படுவதை வீரசிம்மன் பார்த்தான்.
கைதி எங்கே?
முகமூடி மனிதன் கவர்ந்து சென்றான்!


அமரசிம்மா! கொத்தவாலைச் சிறையில் தள்ளு!
பிரபுவே! எல்லாம் கண்மூடிக் கண்திறப்பதற்குள் நடந்து விட்டது. மன்னியுங்கள்.
இவனை இழுத்துச் செல்லுங்கள்.


முகமூடி வீரன் காட்டை நோக்கிப் போனான்...


ஒரு குகை முன் நின்று குதிரையிலிருந்து இறங்கினான்.
சாந்திதேவனைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்?
அவர் நல்ல அரசர் என்பதால்!
வீரசிம்மனோ?
மிகக் கொடியவன்.


அப்படியானால் நீ அமரபுரிக்குப் போய் காளி கோயிலருகே இரு.
தன்னைக் காத்தது யாரென்று வசந்தன் ஆச்சரியப்பட்டான்.
தலைநகரில் வீரசிம்மன் உதவிக் கொத்தவாலை அழைத்தான்.
இன்றுமுதல் நீ தான் கொத்தவால். அந்த முகமூடி வீரனைப் பிடிப்பது உன் பொறுப்பு.
அவனை உயிரோடு பிடித்து உங்கள் முன் நிறுத்துகிறேன்.
அவன் எதிர்த்தால் கொன்றாவது கொண்டு வா.
தொடரும்.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்கள் விஞ்ஞானம்

### உப்பும் தாகமும்

நீங்கள் சற்று உப்பு அதிகமான தின்பண்டத்தை உண்டபின் தாகம் எடுப்பதை கவனித்திருப்பீர்கள். இதனால் உப்பால் தாகம் ஏற்படுகிறது என்பது புலனாகிறது.

உப்பு ஏன் தாகத்தை உண்டாக்கித் தண்ணீர் குடிக்க வைக்கிறது? நம் உணவுப் பொருள்களில் கொஞ்சம் உப்பு உள்ளது. இந்த உப்பு நசைகளிலிருந்து மூத்திரகோசங்களுக்குச் செல்லும் நீரை எடுத்துக் கொள்கிறது. மூத்திர கோசங்களில் தேவையற்ற நீர் தேக்கப் படுகிறது. உண்பதில் உப்பு அதிக மானால் அதிக நீர் எடுக்கப் படுவதால் நசைகளில் நீர்வற்றி விடுகிறது.

நசைகளில் நீர் குறைந்து போனது நாவிற்கு அறிவிக்கப்பட்டு தொண்டை வறண்டு போகவே உடனே ஒருவரை நீர் குடிக்கச் செய்கிறது.




## உங்கள் சுற்றுப்புறம்

### பத்திரம் உயரிடத்திலே!



பறவைகள் தம் கூடுகளை மரங்களின் மீது ஏன் கட்டுகின்றன என்று யோசித்திருக்கிறீர்களா? தம் குஞ்சுகள் பிற உயிரினங்களுக்கு இரையாகி விடக் கூடாதே என்பதால் அவை அவ்வாறு கூடுகளைக் கட்டுகின்றன என எளிதில் கூறிவிடலாம்.

முட்டைகளிலிருந்து வெளி வரும் குஞ்சுகளால் பறக்க முடியாது. பறக்க முடியாத இவற்றை பூனை போன்ற பிராணிகள் எளிதில் பிடித்துக் கொன்று விடும். அவை எளிதில் மரங்களில் ஏறிவிடும். ஆனால் மரத்தின் கிளைகள் உயரப் போகப் போக மெல்லியனவாக ஆகிவிடுகின்றன. அதனால் இப் பிராணிகளால் அம்மெல்லிய கிளை களைப் பற்றி ஏற முடிவதில்லை. அதனாலேயே பறவைகள் தம் கூடுகளைக் கூடியவரை மரங்களில் உச்சிக் கிளைகளில் மிகவும் சிக்கல்க ளோடு கட்டுகின்றன.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்களுக்குத் தெரியுமா?

சில சமயங்களில் சிலர் குறட்டை விடுவதால் உங்கள் ராத்தூக்கம் கெட்டு நீங்கள் காலையில் கண் விழிக்கும் போது எல்லாம் சற்று மங்கலாகத் தெரிவதாக உணர்வீர்கள். குறட்டை என்பது சிரிக்கக் கூடிய விஷயம் அல்ல. அது பிறருக்கு ஒரு பிரச்சினையாகத் தான் உள்ளது.

ஒருவர் ஏன் குறட்டை விடுகிறார்? அவரது தொண்டையிலோ அல்லது மூக்கின் துவாரங்களிலோ ஏதாவது அடைப்பு ஏற்படுவதால் இது




நிகழ்கிறது. இந்த அடைப்பு ஜலதோஷம் சளி போன்றவற்றால் ஏற்படுகிறது. ஒருவர் நிமிர்ந்து படுத்துத் தூங்கும் போது குறட்டை வருகிறது. இந்நிலையில் கீழ்த்தாடை தாழ்ந்து திறந்த நிலையில் இருக்கும் அப்போது வாயினால் மூச்சு விட வேண்டி வருவதால் உட்புகும் காற்று தொண்டையின் மெல்லிய பகுதிகளை அதிரச் செய்து ஒலியை உண்டாக்குகிறது. இது தான் குறட்டை!

## அறிவு வளர!

### பிராணிகள் உலகம்

1. எந்தப் பிராணி தன் படுக்கையை இரண்டாவது தடவைப் பயன்படுத்துவது இல்லை?





2. ஐரோப்பிய மாலுமிகள் ஒரு கடல் உயிரினத்தைக் கண்டு அது கடற்கன்னி என எண்ணினார்கள். அந்த உயிரினம் எது?

3. மனிதர்கள் காண முடியாத வண்ணங்களை புழுபூச்சிகளால் பார்க்க முடியுமா?





4. கொஞ்சமும் இரக்கமே காட்டாது, திறமையாய் வேட்டையாடும் உயிரினம் எது?

5. அண்டார்ட்டிகாவில் புழு பூச்சிகள் உள்ளனவா?



(விடைகள் 66ம் பக்கத்தில்)

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



MAHANTESH C. MORABAD



SOURAA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு பிப்ரவரி 2004 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபிஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

**வாழ்த்துக்கள்!**

**டிசம்பர் 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**
R.**உமாராணி**
நெ: 6, முசாபர் ஜங் பகதூர் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.

**பரிசு பெற்றவை**





பயத்துடன்விளையாட்டோ?
பலத்துடன் சிந்தனையோ?

## 'அறிவை வளர்க்க' விடைகள் (பக்கம் 65)

1. கொரில்லா தினமும் புதிதாகப் படுக்கையை அமைத்துக் கொள்கிறது.
2. ரூடாங்.
3. ஈக்களால் அல்ட்ரா வயலட் கதிர்களைக் காண முடியும். நம்மால் முடியாது.
4. மனிதன்.
5. ஆம், 40 வகைகள் உள்ளன.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited. No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

